# குருதேவர் வாக்கியம்



கமார்ப்புகூரில்

ஸ்ரீ ராமகிருஷ்ணர் பிறந்த வீடு



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் மயிலாப்பூர் சென்னை

# குருதேவர் வாக்கியம்



பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்
அருளியது

ஸ்ரீமத் பிரம்மாநந்த சுவாமிகளால்
தொகுக்கப்பட்டது




ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை
1948

# பொருளடக்கம்



# குருதேவர் வாக்கியம்

—∞✕∞—

## ஆத்ம ஞானம்

1. உன்னை நீ அறிந்துகொள்; அப்பொழுது நீ கடவுளை அறிவாய். "**நான்**" என்பது யாது? என்னுடைய கையா, காலா, தசையா, உதிரமா அல்லது என் சரீரத்தில் வேறு ஏதாவதொரு அவயவமா? நன்கு ஆலோசித்துப் பார். நான் என்ற பொருளொன்றில்லை என்பதை நீ அறிந்துகொள்வாய். வெங்காயத்தின் தோலை உரிக்க உரிக்க மேன்மேலும் தோல்தான் காணப்படும்—விதை ஒன்றும் உனக்குக் கிடைக்காது; அதுபோல 'நான் என்பது எது?' என்று ஆராய்ப்புகின் அது இருக்குமிடம் இல்லாது மறைந்துபோம். கடைசியாக எஞ்சி நிற்பது ஆத்மா—சைதன்யம். "நான்" என்னும் அகங்காரம் அழியும்போது கடவுள் தோன்றுகிறார்.

2. பழுத்த அகங்காரம் ("நான்" என்னும் எண்ணம்), பழுக்காத அகங்காரம் என்ற இரண்டுவித அகங்காரங்கள் இருக்கின்றன. "இது என் வீடு, என் அறை, என் மகன்" என்னும் இத்தகைய கருத்தைக் கொண்ட அகங்காரமானது பழுக்காதது; "நான் ஆண்டவனின் அடிமை; அவனுடைய பாலன்; நான் நித்திய முக்தன்; சர்வக்ஞன்" என்று நினைக்கும் அகங்காரம் பழுத்தது.

3. ஒருவன் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப்பார்த்து "ஸ்வாமி! நான் ஞானம் பெறுமாறு தாங்கள் கிருபை கூர்ந்து ஒரே வார்த்தையில் உபதேசம் செய்யவேண்டும்" என்று கேட்டான். அதற்கு அவர் **"பிரம்மம் ஸத்யம் ஜகத் மித்யை"** (அதாவது, பரம்பொருள் ஒன்றே உண்மை; இவ்வுலகமெல்லாம் பொய்.) — "இதனை நீ உணர்ந்து மௌனநிலையில் இரு" எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

4. ஒருவனுடைய அகங்காரமானது, அவன் தனது சரீரத்தை வைத்திருக்கும் வரையில் அவனை விட்டு முற்றிலும் நீங்குவ

தில்லே. அதன் அடையாளம் சிறிதளவேனும் எப்பொழுதும் தங்கியிருக்கும். தென்னே மரத்தின் மட்டைகள் பழுத்து (காய்ந்து) விழுகின்றன. ஆனுல் அவற்றின் வடுக்கள் மரத்தைவிட்டு அகலாது நிலேத்து விடுகின்றன. அம்மாதிரியே ஒருவனுடைய அகங்காரமும். ஆயினும் அற்ப அளவினதான இந்த அகங்காரமானது முக்த புருஷர்களேப் பந்திப்பதில்லே.

5. ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒருநாள் **நியங்டா** (நிருவாணமா யிருப்பவர்) **தோதாபுரி**யைக் கேட்டதாவது:— "ஆத்மீக வழியில் மிகவுயர்ந்த நிலே யடைந்த நீவிர் தினமும் தியானம் செய்யவேண்டிய அவசியம் யாது?" அதற்குப் பதிலாக **தோதாபுரி** "ஒரு பித்தளேப் பாத்திரத்தை நாடோறும் துலக்காவிட்டால் அது தன்னொளியை யிழந்துவிடு மன்ருே? அது போலவே நாடோறும் தியானம்செய்து வராவிடில் ஒருவன் தன் மனத்தைப் பரிசுத்தமாக வைத்திருக்க முடியாது" என்று பகர்ந்தார். உடனே ஸ்ரீ ராமகிஷ்ணர் "அப்பாத்

திரம் பொன்னுலாயதென்றால் அப்பொழுது தன் னொளியை யிழக்காதே!" என்று மறு மொழி கூறினர். அதாவது, கடவுளையறிந்த ஒருவர்க்கு மேலும் சமயப் பயிற்சி வேண்டுவ தில்லை என்பதாம்.

6. விசாரணை என்பது இரண்டு வகைப் பட்டது. அவை அநுலோமம், லோமம் என்பனவாம். மட்டையன்று, நாரன்று, ஓடன்று; உள்ளிருக்கும் விதையே சத் தென்பது ஒன்று. விதை, ஓடு, நார், மட்டை ஆகிய எல்லாம் உண்மையில் ஒரே பொருள் என்பது மற்றொன்று.

7. நான் என்னும் பாவனை தோன்றும் பொழுதே அதன் அபாவமும் உளதாகின் றது. எவன் பிரகாசத்தை உணர்கிறானோ அவன் இருளையும் உணர்கிறான். எவனுக்குப் பாபம் இன்னதென்று தெரியுமோ, அவனுக் குப் புண்ணியமும் இன்னதென்று தெரியும். எவனுக்குக் குண மின்னதென்று தெரியுமோ அவனுக்குக் குற்ற மின்னதென்று தெரியும்.

8. காலில் செருப்புப் போட்டுக் கொள்வாயானால் நீ முள்ளின்மேலும் சுலபமாய்ப் போகலாம். ஞானமாகிய செருப்பைப் போட்டுக்கொண்டால் உலகமென்னும் முள் நிறைந்த வனமெங்கும் பயமின்றித் திரியலாம்.

9. முன்னொரு காலத்தில் ஓர் அவதூத ஸந்நியாஸி இருந்தார். அவர் ஒருவரோடும் பேசாது மெய் மறந்த பரவச நிலையில் இருந்து வந்தார். அவரை யெல்லோரும் பித்தர் என்று எண்ணினார்கள். ஒரு நாள் அவர் ஒரு கிராமத்தில் பிச்சை யெடுத்து வந்து, அங்கிருந்த ஒரு நாயுடன்கூட உட்கார்ந்து உண்ண ஆரம்பித்தார். இந்த ஆச்சரியத்தைக் கண்டு பலர் அங்குத் திரளாகக் கூடினர். அப்பெரியார் ஒரு கவளம் நாய்க்கு ஊட்டுவார்; மற்றொரு கவளத்தைத் தாம் உண்ணுவார். இவ்வாறாக இருவரும் நண்பர்களைப் போன்று ஒருங்கே உணவருந்தலாயினர். இவரது கோலத்தைக் கண்டு ஜனங்கள் இவரை ஒரு பைத்தியக்காரனெனக் கை கொட்டிச் சிரித்தனர். இது கண்ட ஞானி 'ஏன் நகைக்

3. கடவுள் கற்பகத்தருவைப் போன்றவர். நீ அவரிடம் வேண்டுவது உனக்குக் கிடைக்கும். ஒவ்வொருவனும் தான் தான் வேண்டுவதைப் பெறலாம். ஓர் ஏழையின் மகன் கல்வி கற்று உயர்தர நீதிபதி ஸ்தானத்தை அடைந்தால், தான் சௌக்கியத்துடன் இருப்பதாக நினைக்கிறான். கடவுளும், 'நீ அப்படியே இரு' என்று அவ்வெண்ணத்தையே திருப்பிக் கூறுகிறார். பிறகு அந்த நீதிபதி, உபகாரச் சம்பளம் பெற்று, பகவானுடைய கருணையால் விஷயங்களின் உண்மைநிலையைச் சரியாக அறிய ஆரம்பிக்கிறான். அப்பொழுது அவன் "நான் என்ன உண்மையான காரியம் இவ்வாழ்க்கையில் செய்திருக்கிறேன்?" என்று தனக்குத்தானே கேட்டுக் கொள்ளுகிறான். அப்பொழுது கடவுள் "ஆம், உண்மைதான்; நீ என்ன செய்திருக்கிறாய்?" என்று அவன் வார்த்தைகளையே திருப்பிக் கூறுகிறார்.

4. நிராகாரமான பிரம்மத்துக்கும் ஸாகாரமான சக்திக்கும் வேற்றுமை ஒன்றுமில்லை.

பரமாத்மன் தொழிலொன்றும் செய்யாம லிருப்பதாய் நினைக்கப் படும்போது சுத்தப் பிரம்மன் எனப்படும்; தொழில்கொண்டு, ஆக்கல், அளித்தல், அழித்தல் செய்வதாகக் கருதப்படுங்காலத்து சக்தி எனப்படும்.

5. ஒரு நாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பக்தர் களுடன் கடவுளைப் பற்றிச் சம்பாஷித்துக் கொண்டிருந்தபோது, **மதுர பாபு** * 'ஈசுவர னும் இயற்கை நியதிகளின்படித்தானே நடக்க வேண்டும்; தம்மிஷ்டப்படியே நடக்க இயலா தல்லவா?'' என்று கூற, ஸ்ரீ ராமகிருஷ்ணர் "அஃதெப்படி? அவர் தம் இஷ்டப்படியே நடக்கிறார். விரும்பிய வண்ணம் செய்ய அவ ரால் கூடும்'' என்றார். அதற்கு மதுரபாபு, "அவரிச்சை ஒன்றாலேயே, இந்தச் செம் மலர்ச் செடியில் வெண் மலர்களைப் பூக்கச் செய்ய முடியுமோ?'' என்றார். அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் "நிச்சயமாய் அவர் அப்படிச் செய்யக்கூடும்—அவர் திருவுளங்கொண்டால்

---

* **தக்ஷிணேசுவரத்துக் காளி கோயிலைக் கட்டு வித்த ராணி ராசமணியின் மருமகன்.**

இச் செடி வெண்மலர்களைப் பூக்கக்கூடும்" என்றார். ஆனால் மதுரர் திருப்தி யடைந்த தாகத் தோன்றவில்லை. சில நாட்கள் கழிந்தன. உண்மையில், ஒரு நாள் தக்ஷிணேசுவரத்திலுள்ள மேற்கூறிய புஷ்பச் செடி, ஒரு கிளையில் வெண் மலர்களையும், மற்றொரு கிளையில் சிவப்பு மலர்களையும் புஷ்பித்திருந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவ்விரண்டு சிறு கிளைகளையுமுடைய பெரிய கிளையை மதுரபாபுவிடம் கொண்டுபோனார். அவர் ஆச்சரியங் கொண்டு "ஸ்வாமி! இனிமேல் நான் உங்களுடன் எதைப்பற்றியும் வாதம் செய்வதில்லை" என்று கூறினார்.

6. ஈசுவரன் ரூபமுடையவன், ரூபமில்லாதவன் என்பது எப்படி என்று உனக்குத் தெரியுமா? ஈசுவரன் ரூபி, அரூபி என்று சொல்வது பனிக்கட்டியையும் ஜலத்தையும் பற்றிப் பேசுவது போலாம். ஜலம் உறைந்து பனிக்கட்டியானால் அதற்கு உருவமுண்டாகிறது. அதே பனிக்கட்டி நீராகக் கரையும் போது, உருவம் மறைந்து போகிறது.

7. பீஷ்மாச்சாரியார், அம்புப் படுக்கையில் படுத்துக்கொண்டு, தம் உடலைவிட்டு நீங்குவதற்கு ஏற்ற ஸமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தபோது அவர் கண்களிலிருந்தும் கண்ணீர் பெருகியது. அதைப் பார்த்த அர்ஜுனன், ஸ்ரீ கிருஷ்ண பகவானை நோக்கி, "ஆ கிருஷ்ணா! என்ன ஆச்சரியம்! ஸத்தியந் தவறாதவராயும், இந்திரியங்களை அடக்கினவராயும், ஆத்ம ஞானம் நிறைந்தவராயும் அஷ்டவசுக்களில் ஒருவராயுமிருக்கும் என் பாட்டனாரும் மாயையால் சிக்குண்டு கண்ணீர் சொரிகின்றாரே!" என்றான். இதைக் கிருஷ்ண பகவான் பீஷ்மருக்கு அறிவிக்க, அவர், "ஏ கிருஷ்ணா! மாயையால் கட்டுண்டு நான் கண்ணீர் விடவில்லை என்பதை நீர் நன்கு அறிவீர். உம்முடைய லீலை எனக்குக் கொஞ்சமேனும் விளங்கவில்லையே என்பது தான் என்னைக் கண்ணீர்விடச் செய்கிறது. எந்த பகவானுடைய திருநாமங்களை ஸ்மரிப்பதால் ஜனங்கள் துன்பங்களைத் தாண்டிச் செல்கின்றார்களோ, அவரே பாண்டவர்களுக்

குத் தேரோட்டியாக இருந்து உதவி புரிகிறார். அப்படியிருந்தும் பாண்டவர்கள் படுந் துன்பம் முடிந்தபாடில்லையே" என்றார்.

8. மதுர பாபு காசியாத்திரை சென்ற போது ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவருடன் சென்றார். அப்புண்ணிய க்ஷேத்திரத்தில் இருந்தபோது, ஸ்ரீ ராமகிருஷ்ணர், த்ரைலிங்க ஸ்வாமிகள் என்ற ஒரு பெரியாரைத் தரிசித்து, "கடவுள் ஒருவரேயாக இருக்கும் போது, ஜனங்கள் பல கடவுளைப் பற்றிப் பேசுவானேன்?" என்று கேட்டார். ஸ்வாமிகள் மௌனவிரதம் அனுஷ்டித்து வந்ததால் அவர் ஒன்றும் பேசாது குறிப்பாய் ஒரு விரலை உயர்த்தி, நிஷ்டையிலாழ்ந்தார். அவர் அப்படிச் செய்ததின் பொருளென்ன வெனில் தியானத்தினால் ஒருவன், கடவுள் ஒருவரே யென அறிகிறான். ஆனால் வியவகரிக்கும் வேளைகளில், ஒன்றென்பது போய், பல என்னு முணர்ச்சி தோன்றுகிறது.

9. ரூபியான ஈசுவரனும் அரூபியான ஈசுவரனும் வேறானவர்களல்லர்; ரூபத்தோ

டிருக்கும் அவரே ரூபமில்லாதவராகவு மிருக்கிறார். ஒரு பக்தனுக்கு ஈசுவரன் பல ரூபங்களுடன் தரிசனமளிக்கிறார். அகன்று பரந்திருக்கும் கடற் பரப்பைப் பற்றிச் சற்று யோசித்துப்பார். எந்தத் திக்கில் பார்த்த போதிலும் நிலம் தெரிவதில்லை; அதிகக் குளிரினால் உறைந்த பனிக்கட்டிகளே இங்கும் அங்கும் பார்வையிற் படுகின்றன. இதைப் போலவே, தீவிர பக்தி யென்னும் குளிரினால், எங்கும் நிறைந்த எல்லையற்ற ப்ரம்பொருள் உறைந்து, அதாவது உருவமடைந்து, பக்தனுக்குத் தோன்றுகிறார். சூரியன் உதயமானவுடனே, பனிக்கட்டி கரைந்து போவது போலவே, ஞான சூரியன் உதயமானவுடன் ரூபியான கடவுள் மறைந்து அரூபியாய் விடுகின்றார்.

---

# மாயை

1. மாயையின் இயற்கை என்னவென்று நினைக்கிறாய்? அது ஒரு குளத்தில் மிதந்து கொண்டிருக்கும் பாசியைப் போன்றது. வேண்டும்போது அப்பாசியை ஒதுக்கிவிட லாம்; ஆனால் (நாம் கையை எடுத்தவுடனே) அது மறுபடியும் அந்த இடத்தை மறைத்துக் கொள்ளும். அதைப்போலவே நீ சிந்தனை செய்து ஸத்ஸங்கம் செய்யும் வரையிலும் (இவ்வுலகத்தைப்பற்றின) உண்மைவிளங்கும். ஆனால் அவைகளை விட்டு நீங்கினவுடனே இம் மண்ணுலக ஆசைகள், மாயை என்னும் திரையால் உண்மையை மறைத்துவிடும்.

2. பாம்பின் பற்களில் விஷ மிருந்தபோதி லும் அப்பாம்பு அதனால் கொஞ்சமேனும் தீங்கடைவதில்லை; அது இறப்பதுமில்லை. ஆனால் பாம்பு எதையேனும் தீண்டினால், தீண்டப்பட்டதற்கு அந்த விஷம் கெடுதி செய்கிறது. இதைப்போலவே, மாயையானது ஈசுவரனிடம் நிலைத்து நிற்கினும், ஈசுவரன்

அதன் வயப்படாது அதற் கதீசமாய் இருக்கிறார். நாமோ மாயா மயமான இப் பிரபஞ்சத்தில் மயக்குண்டிருக்கிறோம்.

3. **மாயை** (பாசம்) என்பதற்கும் **தயை** (தர்ம குணம்) என்பதற்குமுள்ள வேற்றுமையென்ன? பெற்றோர், உடன் பிறந்தோர், மனைவி, மக்கள், மருமக்கள் முதலிய சுற்றத்தார், மற்றுமுள்ள சிநேகிதர்கள் இவர்களிடம் ஒருவனுக்கு இருக்கும் பந்தமும் அன்புமே **மாயை** எனப்படும்; எல்லா ஜீவர்களிடமும் சமமாய்க் காட்டப்படும் அன்பு **தயை** எனப்படும். ஈசுவரன் ஸர்வாந்தர்யாமி என்ற ஞானத்திலிருந்தே இந்தத் **தயை** உண்டாகிறது.

4. பேய் பிடித்தவனுக்கு தன்னை ஒரு பேய் பிடித்துக்கொண்டது என்ற அறிவு தோன்றினால் உடனே அந்தப் பேய் அவனை விட்டு விலகுகின்றது. அதைப்போல் மாயை என்னும் பேயால் பிடிக்கப்பட்ட ஜீவன் தானே மயக்குண்டிருப்பதாக அறிந்தவுடனே மாயையிலிருந்து விடுபடுகிறான்.

5. மாயை யென்னும் திரையே ஈசுவரனை நமக்குத் தோன்றவொட்டாமல் மறைத்து வைக்கின்றது. இந்தத் திரை நீங்கும்வரையிலும் பரமாத்மனை நாம் அறிய முடியாது. உதாரணமாக ஸ்ரீ ராமர், லக்ஷ்மணருக்கு இரண்டு மூன்றடிகள் முன் செல்வதாகவும், இவ்விருவருக்கும் நடுவில் சீதாபிராட்டியார் போவதாகவும் வைத்துக்கொள்வோம். இதன்படி, ஸ்ரீ ராமரே பரமாத்மன்; லக்ஷ்மணரே ஜீவன்; ஸீதையே மாயை. ஜானகிப் பிராட்டியார் இருவருக்கும் நடுவில் இருக்கும் வரையில் ஸ்ரீ ராமரை லக்ஷ்மணரால் பார்க்கமுடியாது. அன்னை ஸீதா தேவியார் கொஞ்சம் வழிவிட்டு நின்றால்தான் லக்ஷ்மணர் ஸ்ரீ ராமரைப் பார்க்க முடியும்.

6. மாயை இருவகைப்படும் :—ஒன்று **வித்யா மாயை**; அது நம்மை ஈசுவரனிடம் அழைத்துச் செல்வது. மற்றொன்று **அவித்யா மாயை**; அது நம்மை ஈசுவரனிடமிருந்து பிரிப்பது. வித்தை (**வித்யா**) விவேகம், வைராக்யம் என இரு வகைத்து. அவித்தை

காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் (பொறாமை) என அறுவகைப் படும். இந்த மாயையே 'யான்' 'எனது,' என்னும் உணர்ச்சியை யுண்டு பண்ணுகிறது. இதுவே நம்மை இப் பொய் யுலகில் பந்தப் படுத்தும் சங்கிலி போன்றது. ஆனால், வித்தை தோன்றும்போது அவித்தை யெல்லாம் அடியுடன் நாசமடைகின்றது.

7. கலங்கியுள்ள நீரில் சந்திர சூரியர்களுடைய பிரதிபிம்பத்தைத் தெளிவாய்க் காண முடியாது. அதுபோல 'யான்' 'எனது' என்னும் மாயையால் கலங்கியிருக்கும் புத்தியிலும், ஈசுவரனுடைய அருட்பிரகாசத்தைச் சரியாய் உணர முடியாது.

8. உலகனைத்துக்கும் ஒளியைக் கொடுக்கும் சூரியனை நாம் காணமுடியாதபடி சிறு மேகமானது மறைக்கின்றது. அதுபோல ஸர்வாந்தர்யாமியாயும், ஸர்வ ஸாக்ஷிபூதனாயும் விளங்கும் ஸச்சிதாநந்தப் பரம்பொருளை நாம் பார்க்காதபடி துச்சமான மாயையாகிய திரை மறைக்கின்றது.

9. ஒரு குளத்தில் மிதந்துகொண்டிருக்கும் பாசியை நீ ஒதுக்கினல் ஒதுங்கும்; ஆனல் அது நீ கையை எடுத்தவுடனே முன்னிருந்த படி ஒன்று கூடும். அதுபோலவே மாயையை நீக்கினல் அது மறுபடியும் வந்தடையும். ஆனல் ஒரு மூங்கிற்பாய் கொண்டு ஒதுக்கின பாசியைத் திரும்பவொட்டாது செய்ய முடிவதுபோல, ஞானம், பக்தி என்னும் வேலி கொண்டு மாயையை ஒதுக்கி அது திரும்பவும் வரவொட்டாது செய்ய முடியும். அப்பொழுதுதான் நாம் சச்சிதானந்தத்தைக் காண்போம்.

10. தக்ஷிணேசுவர ஆலயத்து நகபத்காணவின் (சங்கீத சாலையின்) மேலறையொன்றில் ஒரு ஸாது சில நாள் வசித்துவந்தார். அவர் யாருடனும் பேசாமல் ஸதா ஈசுவரத் தியானத்திலேயே ஈடுபட்டிருந்தார். ஒரு நாள் திடீரென மேகமொன்று பரவியதால் வானம் இருண்டதையும், அம்மேகத்தைச் சிறிது நேரத்திற்கெல்லாம், பலமான காற்றென்று அடித்துச் சென்றதையும் அந்த ஸாது கண்

டார். உடனே அவர் வெளியில் வந்து சிரித்துக்கொண்டு ஆட ஆரம்பித்தார். இதைக் கண்ட ஸ்ரீ ராமகிருஷ்ணர், "இதென்ன, எப்பொழுதும் அமைதியாக உமதறையில் தங்கி வந்த நீர் இன்று இவ்வாறு கூத்தாடிச் சிரித்துக் குதூகலப்படுவதின் காரணமென்ன?" என வினவினர். அதற்கவர், "இவ்வாழ்க்கையில் நம்மைச் சூழ்ந்திருக்கும் மாயையும் இப்படிப்பட்டதே. முதலில் வானம் நிர்மலமாயிருக்கிறது. திடீரென்று மேகமானது மறைக்க இருள் சூழ்கின்றது; உடனே அது நீங்கி மறுபடியும் வானம் முன்போல் ஆய்விடுகின்றது" என்றார்.

---

# அவதார புருஷர்

1. பல மரக்கட்டைகளைப் பிணைத்துச் செய்யப்பட்ட பெரிய தெப்பம் ஒன்று, தன் மீது நூற்றுக்கணக்கான ஜனங்களைச் சுமந்து கொண்டு நீரின்மேல் சென்றாலும் அமிழ்வதில்லை. ஆனால் ஒரு மரத்தின் சிறு துண்டோ ஒரு காகம் தன் மேல் உட்கார்ந்தாலும் அமிழ்ந்துவிடும். அவதார புருஷர் முற்கூறிய தெப்பம் போன்றவர். அவர்களுடைய கருணையால் நூற்றுக்கணக்கான ஜனங்கள் முக்தியடைகின்றனர். ஒரு சித்தனோ மிகவும் சிரமத்துடன் தான் மாத்திரம் முக்தியடைய முடியும்.

2. நீராவி யந்திரம், போய்ச் சேரவேண்டிய இடத்திற்குத் தான் போய்ச் சேருவதோடு, தன் பின்னால் நீளமாய் இணைக்கப்பட்ட சுமைகள் நிறைந்த பல வண்டிகளையும் இழுத்துச் செல்கின்றது. அதுபோலவே அவதார புருஷர்கள் தாம் செல்லவேண்டிய இடத்தை அடைவதோடு, எண்ணிறந்தோரையும் ஈசன் திருவடிக்குக் கொண்டு சேர்க்கின்றனர்.

---

# மக்கள் பலவகையினர்

1. மனிதனை ஒரு தலையணை யுறைக்கு ஒப்பிடலாம். உறைகள் கருப்பு, சிவப்பு, பச்சை முதலிய பல நிறங்கொண்டவைகளாக விருக்கலாம். ஆனால் அவைகள் எல்லாவற்றுள்ளும் இருப்பது ஒரே பஞ்சுதான். அவ்விதமே மனிதரும், சிலர் அழகாயிருக்கிறார்கள் ; சிலர் அழகின்றி யிருக்கின்றனர் ; சிலர் நல்லவர்களா யிருக்கின்றார்கள் ; சிலர் கெட்டவர்களா யிருக்கின்றார்கள். ஆனால், இவர்களெல்லோருள்ளும் உறையும் ஈசுவரன் மாத்திரம் ஒருவனே.

2. இவ்வுலகில் இரண்டு வகை மனிதர் இருக்கின்றனர். ஒரு வகையினர் புடைக்கும் முறத்தையும், மற்றவர் சலிக்கும் சல்லடையும் ஒப்பர். முறமானது தூற்றும்போது உபயோகமற்ற உமியைச் சிதறவிட்டு, உபயோகமுள்ள அரிசியை நிறுத்திக்கொள்ளும். அதுபோலவே பெரியோர் கொள்ளத் தகாதவை (பெண், பொன் முதலியவை) களைத் தள்ளி, ஏற்ற ஒரே பொருளாய் இறை

வனைத்தம் மனத்தில் நிறுத்தித் தியானம் செய்வர். ஆனால் சல்லடையானது உபயோகமான பொருள்களைக் கீழேவிட்டு, உபயோகமற்றதை நிறுத்திக் கொள்வதுபோல, தாழ்ந்தோர் ஈசுவரனை மறந்துவிட்டு, பொன்னையும் பெண்ணையுமே முக்கியமாகக் கொள்வர்.

3. சாணத்தை யுருட்டிச்செல்லும் வண்டு போன்றது லௌகிகருடைய மனம். வண்டு சாணத்திலன்றி வேறெதிலும் வசிக்க விரும்பாது. நறுமணம் வாய்ந்த தாமரை மலரில் தங்கும்படி அதனைப் புகுத்துவீரேல் அது மிக்க வேதனையுறும். அதுபோல உலக வாழ்க்கையில் ஈடுபட்டு அதிலேயே கிடந்துழல்பவர் உலக விஷயங்களைப் பற்றிய பேச்சு ஒன்றைத் தவிர வேறெதையும் விரும்பார்; ஈசனது மகிமையும் அவர் திருநாமமும் சொல்லப்படு மிடங்களினின்றும் விலகி விடுவர்; வீணான சோம்பேறிகள் பேசும் பேச்சுக்களைக் கேட்டு ஆனந்தமடைவர்.

4. செம்படவன் வலைக்குள் பல மீன்கள் அகப்பட்டுக் கொள்ளுகின்றன. அவற்றுள்

சில வெகு பலமாக வலையைத் தாக்கி அதைக் கிழித்து வெளிச் செல்லும்; சில அங்குமிங் கும் ஓடியலைந்து தப்ப இயலாது திகைக்கும்; மற்றுஞ் சில ஒன்றுஞ் செய்யாது சும்மா இருக்கும். இதுபோலவே மானிடர்களில் முமுக்ஷுக்கள், தம் சக்தியால் உலகமாகிய பந்தத்திலிருந்து விடுபட்டுச் செல்கின்றனர். சிலர் சிரமப்பட்டும் போதுமான சக்தியில் லாதவராதலால் தப்பித்துக்கொள்ளாதிருக் கின்றனர். மற்றவர்களோ இவ்வுலகத்தில் சம்சார பந்தத்திலிருந்து விடுபட இச்சிப்பதே யில்லை.

5. செம்படவர் குலப்பெண் ஒருத்தி ஒரு நாளிரவு மீன் விற்றுவிட்டு வீட்டிற்குப் போய்க்கொண்டிருந்தபோது, வழியில் புயல் பலமாய் அடித்தது. ஆதலால், அவள் ஒரு பூ விற்பவன் வீட்டில் அன்றிரவு தங்கினாள். அவன் மிக்க அன்போடு அவளுக் கிடமளித்து உபசரித்தான். தன் வீட்டில் புஷ்பங்கள் சேகரித்து வைக்கப்பட்டிருந்த ஓர் அறையின் பக்கத்திலுள்ள நடையொன்றில்

அன்றிரவைக் கழிக்க அனுமதித்தான். அவ்வளவு சௌக்கியமான இடம் முதலியவை கிடைத்தும் அன்றிரவு அவளுக்குச் சிறிதும் தூக்கம் வரவில்லை. நெடுநேரம் ஆலோசித்தனள்; பின்னர் தூக்கம் வாராமைக்குக் காரணம் 'அண்டையிலுள்ள புஷ்பங்களினின்றும் வீசும் சுகந்தமே' யென்று அறிந்தாள். உடனே அவள் தன்னிடமிருந்த காலியான மீன் கூடையின்மேல் கொஞ்சம் தண்ணீரைத் தெளித்து, அதனைத் தன் மூக்கினருகில் வைத்துக்கொண்டு படுத்தாள். சிறிது நேரத்திற்குள் அவள் ஆழ்ந்த உறக்கத்தில் அமிழ்ந்தாள். இத்தன்மையதே உலக விஷயங்களில் மூழ்கியவர் நிலைமையும். இவர்களும், உலக விஷயங்களின் அழுகிய துர்நாற்றம் ஒன்றைத் தவிர வேறெவற்றையும் விரும்பார்.

6. ஒரு புருவினது தொண்டையின் வெளிப்புறத்தைத் தடவிப் பார்த்தால் அதனுள் தானியங்கள் இருப்பதை உணரலாம். அது போலவே உலக மாயையில் அகப்பட்ட ஒருவனோடு சற்று வார்த்தையாடினால் அவனது

உண்மைக் குணம் வெளிவரும். அவனுடைய மனத்தில் லௌகிக எண்ணங்களும் இச்சைகளும் நிறைந்திருக்கக் காணலாம். உலக விஷயங்களையே நாடுவர் இத்தகைய மனிதர்; ஈசுவரனைப் பற்றிய சம்பாஷணைகளை அவர்கள் விரும்பார்.

7. ஒருவன் முள்ளங்கியைத் தின்றிருந்தால் அவன் விடுகின்ற ஏப்பத்தின் மணமே அவன் இன்னது தின்றான் என்பதைத் தெரிவித்து விடும். அதுபோலவே, ஞானியொருவரை நீ யணுகினால் அவர் உடனே ஈசுவரனைப் பற்றிய விஷயங்களைப் பேச ஆரம்பித்து விடுவார். ஆனால் உலகப் பற்றுள்ளவனோ உலக வியவகாரங்களைப் பற்றியே பேசுவான்.

8. ஈக்களில் இருவகை யுண்டு; ஒன்று தேனை மாத்திரம் உட்கொள்ளும். ஆனால் மற்றொன்றோ தேனையும் குடிக்கும்; அதனுடன் சமயம் கிடைத்தபோது அழுக்குள்ள புண் முதலியவைகளில் அதிக பிரியத்துடனும் உட்காரும். அப்படியேதான் மனிதரும். பக்தியுடைய அறிஞர் ஈசனைத் தவிர வேறொன்

றைப் பற்றியும் பேசார். ஆனால் உலக விஷயங்களில் பற்றுடையவர்களோ, பெண் பொன் முதலியவற்றைக் குறித்த பேச்சு ஏதேனும் எழுந்தால், தாங்கள் அதுவரை கேட்டுக்கொண்டிருந்த ஈசனைப் பற்றிய விஷயங்களை யெல்லாம் ஒதுக்கிவிட்டு உடனே அவற்றைப் பற்றிச் சம்பாஷிக்க ஆரம்பித்து விடுவார்கள்.

9. உலகப்பற்று அதிகமாயுள்ளவர்கள் பிறரால் பாடப்படும் பகவத் கீர்த்தனங்களைத் தாங்களும் கேட்கமாட்டார்கள்; யாராவது பக்தியுடன் கேட்டு நிற்கக்கண்டால் அவர்களையும் தடுப்பார்கள். ஈசுவரனையும், பக்தர்களையும் மதங்களையும் அவர்கள் தூஷிப்பார்கள்.

10. முதலையின் மேல்தோல் எவ்வித ஆயுதத்தாலும் வெட்டுப்படாதபடி அவ்வளவு கடினமாய் இருக்கிறது. அதுபோல ஸம்ஸாரத்தில் ஆழ்ந்துள்ள மனிதனுக்கு எவ்வளவு தத்துவோபதேசம் செய்தாலும் அது அவன் மனதிற் புகாது.

11. சூரியனுடைய வெளிச்சம் எல்லாப் பொருள்களின் மேலும் சமமாய் விழுந்த போதிலும் கண்ணுடி, ஜலம், பளபளப்பான உலோகம் ஆகிய இவைபோன்ற தெளிவான பொருள்களே அவ்வெளிச்சத்தை நன்ருய்ப் பிரதிபலிக்கச் செய்கின்றன. அதுபோல பகவான் எல்லாருள்ளும் இருந்தாலும் பக்தர்களுடைய இருதயத்திலே நன்ருய்ப் பிரகாசிக்கின்ருர்.

12. கொழுக்கட்டைகளெல்லாம் வெளிப் பார்வைக்கு ஒரே மாதிரித் தோன்றலாம்; ஆனல் வெவ்வேறு விதமான பொருள்கள் உள்ளே வைக்கப்பட்டிருக்கக் கூடும். உதாரணமாகச் சிலவற்றில் தேங்காய்ப் பூரணமும், சிலவற்றில் பாற்கட்டியும் இவ்வாருகப் பல பொருள்களுள. அதுபோல மனிதர்களெல்லாரும் உடலமைப்பில் ஒரே மாதிரியிருந்தாலும் குணவித்தியாசத்தால் பலவகைப் படுவர்.

13. எல்லா இடங்களிலும் காணப்படும் தண்ணீர் நாராயண ஸ்வருபமே (ஈசுவரனே).

ஒன்றைக் கொண்டு வாய் கொப்பளிக்கலாம்; ஓரிடத்திலிருக்கும் நீர் காலலம்ப உதவும், ஆனால் குடிக்க உதவாது: அதனால் அதற்கு வேறு நீர் வேண்டும்; நாம் கையால் தீண்டக் கூடாத அசுசியான நீருமுண்டு. அதுபோல, நாம் தரிசிக்கத் தகுந்த இடங்கள் சிலவுள; அருகே செல்லக் கூடத் தகாத இடங்களுமுள.

14. புலியினிடமும் ஈசுவரன் இருப்பது உண்மையே. ஆனால் நாம் அதன் எதிரில் போவது தகுதியன்று. இதுபோலத் தீயவர் உள்ளத்தில் ஈசுவரன் உறைவ துண்மையே யெனினும் அவருடன் உறவு கொண்டாடல் தகாது.

15. 'ஜீவன்கள் எல்லாம் நாராயணனே' எனக் குரு உபதேசித்ததைக் கேட்ட சிஷ்யன், ஒருநாள் வீதியில் மதயானை ஓடிவரக் கண்டான். யானை அவனை நோக்கி வேகமாய் வந்துகொண்டிருந்தது. யானைப் பாகன் "விலகுங்கள், விலகுங்கள்" என உரத்த குரலில் கூவிவந்தான். சிஷ்யனைத் தவிர அனைவரும் விலகினர். அவனோ "நான்

என் விலகவேண்டும்? நானும் நாராயணன்; யானையும் நாராயணன்; இருவரும் ஒருவரே யாதலின் என்னை யானை என்ன செய்யும்?'' எனத் தனக்குள் நினைத்து அசையாது அப் படியே நின்றான். முடிவில் யானை அவனைத் துதிக்கையால் தூக்கி அப்புறம் வீசியெறிந்து சென்றது. அதனால் பலமான காயங்களைப் பெற்ற சிஷ்யன் திரும்பிச் சென்று நடந்த தைக் குருவினிடம் முறையிட, அவர் "அப்பா உண்மைதான். நீயும் நாராயணன், யானையும் நாராயணன்; பாகனும் நாரா யணன் தானே; அவன் உன்னை வழிவிட்டு விலகச் சொல்லியும், நாராயணனான அவன் வார்த்தையின்படி நீ ஏன் விலகவில்லை?'' என்றார்.

16. பெரியாருடைய கோபமானது நீரின் மேற் கிழித்த வடுவைப் போலத் தோன்றின உடனே மறைந்துவிடும் தன்மையது.

17. பிராம்மணனுடைய புத்திரன் பிறப் பினால் பிராம்மணன்தான். ஆனால் பிறப் பினால் பிராம்மணரானோரிற் சிலர் கற்றறிந்த

பண்டிதர்களாகவும், சிலர் புரோகிதர்களாக வும், சிலர் சமையற்காரர்களாகவும், மற்றும் சிலர் கேவலமான தாசிகள் வீட்டையே குடி யாய்க் கொண்டவர்களாகவும் இருக்கின் றனர்.

18. செம்பொன்னிற்கும் பித்தளைக்கு முள்ள வேறுபாடு உரைகல்லில் உரைப்பதால் தெரியவரும். அதுபோல நல்லவரையும் அல்லாதவரையும் அவரவர்களுடைய பக்தி யினு லறியலாகும்.

19. மனிதர்கள் இரண்டுவிதமாகப் பகுக் கப்படுவர்; அவர்களுக்கு (வங்காள பாஷை யில்) **மானுஹுஷ்** (சாதாரண மனிதர்) என்றும், **மான்ஹுஷ்** (உஷாரான மனமுடை யவர், அதாவது ஞானிகள்) என்றும் பெயர். பகவானிடத்தில் மனத்தைச் செலுத்து வோரே பிற்கூறப்பட்ட ஞானிகள். பொன் மீதும் பெண்மீதும் ஆசை கொண்டலைப வரோ சாதாரண மனிதராவர்.

20. முட்களைத் தின்பதனுல் ரத்தம் வாயி லிருந்து சொரிந்தாலும் ஒட்டகம் பின்னும்

அம்முட்களையே மகிழ்வுடன் கடித்துண்ணும். அதுபோல இவ்வுலக மார்மையில் ஈடுபட்டோர் என்ன கஷ்டங்கள் வரினும் அதிலேயே உழல்வார்; அதிக துக்கத்தை யளிக்கக்கூடிய இழவு ஒன்று நேரிட்டாலும், வெகு சீக்கிரத்தில், அதனை மறந்துவிட்டு, அத்தகையதொன்றும் நேராததுபோலக் களிப்புடன் வாழ்கின்றனர்.

21. காரணமின்றி மளமளவென்று வெகு வேகமாகப் பேசுபவனையும், தன் மனத்திலிருக்கும் எண்ணத்தை மறைப்பவனையும், அயலார் காணும்படி துளசிமாலை யணிந்து தன் பக்தியைக் காட்டிக் கொள்பவனையும், பிறரைப் பார்க்க விருப்பமில்லாததுபோல் பெருமுக்காடிட்டிருக்கும் ஸ்திரீயையும், மிக்க தீமை விளைப்பதான நீர்க்கோரைகளால் மூடப்பட்ட அழகிய குளத்தின் நீரையும் நாம் நீக்கவேண்டும். (மேற்கூறியவை யெல்லாம் பொய் வேடமே என்றபடி.)

---

# குரு

1. குரு ஒருவரே; ஆனால் உபகுருக்கள் பலராயிருக்கலாம். எவரிடம் எது கற்றிடினும் அவரை ஓர் உபகுருவெனலாம். இத்தகைய உபகுருக்கள் இருபத்து நால்வரைச் சிறந்த அவதூதர் ஒருவர் அடைந்திருந்தார் எனப் பாகவதத்தில் கூறப்பட்டிருக்கிறது.

2. ஒருநாள் மேற்கூறிய அவதூதர் ஒரு மைதானத்தின் வழியே நடந்துபோகும் பொழுது, உரத்த மேளதாளங்களுடன் வெகு விமரிசையாக வரும் மணக்கோலம் ஒன்றைக் கண்டார். அருகே ஒரு வேடன் தன் இலக்கின் மேலே கவனம் வைத்து மணக்கோலத்தை ஒரு முறையேனும் திரும்பிப் பாராமலும் மேளதாளங்களின் ஓசைக்குச் செவி கொடாமலும் நின்றான். இதுகண்ட அவதூதர், அவனை வணங்கி, "ஐயா! நீரே என் குரு; நான் நிஷ்டையிலமரும்போது, உமது மனம் இலக்கின்மீதே நிற்பதுபோல, பகவான்மீது என் மனமும் நிற்கட்டும்" என்றார்.

3. வலைஞன் ஒருவன் தூண்டில் முள்ளைக் கொண்டு குளத்தில் மீன் பிடித்துக்கொண்டிருந்தான். அவதூதர் அவனருகிற் சென்று, ஓர் ஊரின் பேரைச்சொல்லி, "அண்ணு! இந்த ஊருக்கு வழியெது?" என்று வினவினர். அச்சமயம் மிதக்கும் தக்கையானது தூண்டிலிலுள்ள இரையை மீன் கடிக்கிறதென்பதைக் காட்டிற்று; அதனுல் வலைஞன் பதிலொன்றும் கூருது தூண்டிலையே கவனித்திருந்தான். மீனைப் பிடித்த பிறகு, அவன் அவதூதரைத் திரும்பிப் பார்த்து, "ஐயா! நீர் என்ன சொல்லிக் கொண்டிருந்தீர்?" என்ருன். அவதூதர் அவனை வணங்கி "ஐயா! நீரே என் குரு, நான் என் இஷ்டதேவதையைத் தியானிக்கும்பொழுது, உம்மைப் பின்பற்றி, என் தியானத்தை முடிக்கும் வரையில் வேறொன்றையும் கவனியாமலிருப்பேனுக" என்ருர்.

4. மீன் ஒன்றைத் தன் மூக்கில் குத்திச் செல்லும் ஒரு பருந்தை, வேறு சில பருந்துகளும், காக்கைகள் பலவும் சூழ்ந்துகொண்டு

பருந்தைக் கொத்தி, மீனைப் பிடுங்க முயன்றன. அப் பருந்து எப்பக்கம் சென்றபோதிலும், விடாது அவை கத்திக்கொண்டு பின் தொடர்ந்தன; தொந்திரவு பொறுக்காது மீனைப் போட்டுவிடும்படி அதனைச் செய்தன. உடனே மற்றொரு பருந்து அம் மீனைக் கௌவிக்கொள்ள, அவையெல்லாம் அப்பொழுது அதைப் பின் தொடர்ந்தன. முந்திய பருந்து தொந்திரவு ஒழிந்து, ஒரு மரத்தின் கிளையில் அமைதியாய் உட்கார்ந்திருந்தது. இம்மாதிரி சாந்தமாய் உட்கார்ந்திருக்கும் பறவையைக் கண்ட அவதூதர் அதனை வணங்கி, "நீரே என் குரு, ஏனெனில் ஒருவன் தனக்குள்ள உபாதிகளை விட்ட பிறகே அவனுக்கு இவ்வுலகில் மனவமைதியுண்டாகும்; இன்றேல் ஒவ்வொரு நொடியிலும் கஷ்டமே என்பதை நீர் எனக்குக் கற்பித்தீர்" என்றார்.

5. நாரையொன்று, மீனைக் கொத்துவதற்காகச் சதுப்பு நிலத்தில் மெல்லச் சென்றுகொண்டிருந்தது. ஒரு வேடன் அதன் பின்

விருந்து அதன்மேல் அம்பு எய்யக் குறி பார்த்தான். இதை அந்த நாரை சிறிதேனும் அறியவில்லை. அவதூதர் அந்த நாரையை வணங்கி "நீரே என் குரு; நான் தியானத்தி லமரும்போது, உம்மையே உதாரணமாகக் கொண்டு, என் பின் யார் நிற்கிறார்களென் பதைக் காணத் திரும்பாமலிருப்பேனாக" என்றார்.

6. தேனீயொன்றையும் குருவாகக்கொண் டார் அவதூதர். அத் தேனீ வெகு கால மாக மிகுந்த சிரமத்துடன் தேனைச் சேர்த்து வைத்து வந்தது. எங்கிருந்தோ ஒருவன் வந்து தேன் கூட்டைக் கலைத்து, தேனைக் குடித்துவிட்டான். வெகுநாள் கஷ்டப்பட்ட பலனை அநுபவிக்க அத்தேனீக்குக் கொடுத்து வைக்கவில்லை. அதைக்கண்ட அவதூதர் தேனீயை வணங்கி, "பகவானே! நீரே என் குரு! சேமித்து வைக்கப்படும் ஐசுவரியத் தின் நிச்சயமான கதி என்ன என்பதை உம் மிடமிருந்து அறிகிறேன்" என்றார்.

7. "ஆயிரக்கணக்கான குருக்கள் அகப் படுவார்கள்; ஆனால் சிஷ்யன் ஒருவன் கிடைப்பதரிது" என்பது ஒரு பழமொழி. நற்புத்தி கூறக் கூடியவர்கள் பலர்; ஆனால் அதைப் பின்பற்ற இச்சை கொண்டவர்கள் வெகு சிலரே.

8. ஒருவனுக்கு உண்மைப் பக்தி தோன்றி, அவன் உபாஸனைகள் செய்ய ஆவலுடனிருப் பானாகில், பகவான் நிச்சயமாக அவனுக்குத் தகுந்த குரு ஒருவரை ஏற்படுத்துவார். அதைப்பற்றி விசாரமே வேண்டியதில்லை.

9. உத்தமர், மத்திமர், அதமர் என வைத் தியர்களை மூன்று வகுப்பினராகப் பிரிக்க லாம்—அதம வைத்தியர், நோயாளியின் நாடி யைப் பரீக்ஷித்து, மருந்து கொடுத்து உட் கொள்ளும்படிச் சொல்லிப் போய்விடுகிறார். பிறகு அவன் மருந்தை உட்கொண்டானா இல்லையாவென விசாரிப்பதில்லை. மத்திம வகுப்பினரைச் சார்ந்த வைத்தியர், மருந் தைச் சாப்பிடுவதினால் பிணி நீங்கும் என்று நோயாளியின் மனத்தில் படும்படி செய்து,

மருந்தைச் சாப்பிடும்படி நல்ல வழிகளிலெல்லாம் அவனுக்குக் புத்தி கூறுவார். உத்தம வைத்தியரோ வெனில், நோயாளி மருந்தைச் சாப்பிடுவதில்லை எனத் தீர்மானித்திருக்கிறுன் என்று கண்டவுடன், அவன் மார்பில் முழந்தாளிட்டு, மருந்தைத் தொண்டைக்குள் செலுத்தப் பின் வாங்குவதில்லை. இது போலவே சிஷ்யனுக்கு ஆத்மோபதேசம் செய்து அதற்குமேல் அவனைக் கவனியாதிருக்கும் குரு அதம குருவாவர். சிஷ்யனுடைய நன்மைக்காக உபதேசங்கள் மனத்தில் அழுந்தும் வண்ணம் பலமுறை போதிப்பதினுல், சிஷ்யனுடைய க்ஷேமத்தில் சிரத்தை கொண்டதாகக் காட்டும் குரு மத்திம வகுப்பைச் சார்ந்தவர். ஆனுல், தம் சிஷ்யன் செவி கொடுத்துக் கேட்கவில்லை யென்ருே, தம்முபதேசங்களின்படி நடக்கவில்லை யென்ருே அறிந்து, அவற்றின்படி நடக்கக் கட்டாயப்படுத்தும் குருவே உத்தமராவர்.

---

## மதம் அனுஷ்டித்தற் குரியது, வாதத்திற் குரியதன்று

1. வேதம் புராணம் முதலியவைகளிலடங்கியுள்ளவைகளைப்பற்றி எவ்வளவு காலம் ஆராய்ச்சி செய்ய வேண்டும்?—எம்பெருமானைத் தரிசிக்கும் வரையில்தான். ஒரு பூவின்மேல் உட்காரும் வரையில்தான் தேனீ ரீங்காரம் செய்யும்; தேனைக் குடிக்க ஆரம்பித்தவுடன், ரீங்காரமெல்லாம் நின்று விடுகிறது.

2. காலஞ்சென்ற மஹான் கேசவ சந்திர ஸேனர், ஸ்ரீ ராமகிருஷ்ணரைத் தக்ஷிணேசுவர ஆலயத்தில் தரிசித்து, "பல பண்டிதர்கள் எண்ணிறந்த நூல்களை வாசிக்கின்றனர். அப்படி இருந்தும் ஆத்மஞானத்தில் அவர்கள் அறிவிலிகளாக இருப்பானேன்?" என்று கேட்டார். அதற்குக் குருநாதர் பின்வரும் பதிலை யளித்தார். "கழுகும் பருந்தும் வானத்தில் வெகு உயரப் பறக்கின்றன. ஆனால் அவைகளுடைய பார்வையோ, தாr

நாற்றம் வீசும் பிணங்கள் நிறைந்த குழிகளின் மேல்தானிருக்கிறது. போலிப் பண்டிதர்களுடைய உள்ளம் இவ்வுலகப் பொருள்களிடம் பற்றுக்கொண்டிருக்கிறது; அதனால் மெய்யறிவு அவர்களால் பெறமுடியவில்லை. பல வேதங்களைப் படிப்பதனால் அவர்களுக்கு என்ன நன்மை உண்டாகும்?"

3. கிரந்தங்கள் (புஸ்தகங்கள்) எல்லாம் கிரந்திகள் (முடிச்சுக்கள்) என ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறுவர். விவேகமும், வைராக்கியமுந் தராத வெறும் படிப்பெல்லாம் ஒருவனுடைய செருக்கையும் வீண் பெருமையையும் அதிகமாக்குகின்றன. (மனத்திலுள்ள முடிச்சுக்களை அதிகமாக்குகின்றன.)

4. வாதம் புரிவதில் மிக்க விருப்பங் கொண்ட ஒருவரை நோக்கி ஸ்ரீ ராமகிருஷ்ணர் "ஒரே வார்த்தையால் நீர் திருப்தியடைவீராயின் என்னிடம் வாரும்; அஃதின்றி வெகு நேரம் வாக்குவாதம் புரிந்து உண்மையை அறிய வேண்டுமென விரும்பினால், கேசவ சந்திரஸேனரிடம் போம்" என்றார்.

5. ஒரு குடத்தில் நீர் நிறையும்போது "கபக்" "கபக்" என்னும் ஓசை கேட்கிறது. குடம் நிறைந்தவுடனே ஓசையும் நின்று விடுகிறது. அதுபோலவே ஈசுவரனைக் காணுதவன் அவரைப்பற்றி வீண் வாதம் புரிகிறுன். அவனைத் தரிசித்தவனே மௌனமாகவே பரமானந்தத்தை அநுபவிக்கிறுன்.

6. விவேகமும் வைராக்கியமு மின்றி வேத நூல்களைக் கற்பதினுல் யாதொரு பயனுமில்லை. முற்கூறிய இரண்டு மின்றி ஆத்மஞான விருத்தி சிறிதேனு மேற்படாது. **விவேகம்** என்பது, ஸத்தியம் (ஈசுவரன்) அஸத்தியம் (மாயப் பிரபஞ்சம்) இவ்விரண்டிற்குமுள்ள வேற்றுமையை அறிந்து ஸத்தியத்தை மாத்திரம் பற்றுதலாம். ஸ்தூல சரீரத்தினின்றும் ஆத்மா வேறுனது என்றுணரும் ஞானமும் **விவேகம்** எனப்படும். இவ்வுலகப் பொருள்களின்மீது பற்றற்று இருப்பதே **வைராக்யம்** எனப்படும்.

7. நடைபெற்றுவரும் வருஷத்தில் இருபது மரக்கால் மழை பெய்யுமெனப் பஞ்சாங்கத்

தில் கூறப்பட்டிருக்கிறது. அவ்வளவு அதிக மழையைக் காட்டும் அப்பஞ்சாங்கத்தைப் பிழிந்துபார்.—ஒரு துளிநீர் கூட அதினின் றும் வாராது; அதுபோல வேதபுராண நூல் களில் பல உபதேசங்களை நாம் காணலாம். அவற்றை வாசிப்பதினுல் மாத்திரம் ஒருவன் ஆத்மஞானியாகமாட்டான். (ஆத்மஞானி யாக வேண்டுமானுல்) அந்நூல்களிற் கூறப் பட்ட அனுஷ்டானங்களைக் கைக்கொள்ள வேண்டும்.

8. இருவர் மாந்தோப் பொன்றிற்குள் நுழைந்தனர். முதலாமவன் தோட்டத்திற் குள் நுழைந்ததும், தோட்டக்காரனைக் கண்டு பேசி, அவனுடைய அனுமதி பெற்று, ஒரு மரத்தருகிற் சென்று, பழத்தைப் பறித்துத் தின்ன வாரம்பித்தான். இரண்டாமவனோ அங்குள்ள மாமரங்கள் எத்தனை? ஒவ்வொரு மரத்திலு மிருக்கும் கனிகள் எத்தனை? தோட்டத்தின் விலை எவ்வளவிருக்கும்? என மதிப்பிட ஆரம்பித்தான். இவ்விருவரில் புத்திசாலி யார்? பழங்களை அருந்து, அது

உன் பசியை அடக்கும். மரத்திலுள்ள இலைகளை எண்ணுவதாலும், தோப்பின் விலையை மதிப்பிடுவதாலும் பயனென்ன? மனோவன்மையாற் பெருமைகொண்டவன் கடவுளைப் பற்றிப் பல தர்க்கங்களும் வீண்வாதங்களும் புரிவான். ஆனால் வணக்கமுள்ள ஞானியோ, பகவானருள் பெற்று இவ்வுலகில் பேரானந்தம் அனுபவிக்கிறான்.

9. ஒரு சந்தை நடக்குமிடத்திற்கு வெகு தூரத்திலிருக்கும் ஒருவனுக்கு ஒன்றும் தெளிவாய்க் கேட்பதில்லை. "ஹோ ஹோ" என்ற இரைச்சல்தான் கேட்கும். ஆனால் சந்தைக்குள் நுழையும்போது இரைச்சல் என்னவென்று விளங்குகிறது. சிலர் பேரம் பண்ணுவதையும் சிலர் சாமான்கள் வாங்குவதையும் அவன் காண்கிறான். அதுபோல ஒருவன் மத வாழ்க்கைக்கு வெகு தூரத்தில் இருக்கும் வரையில் மதத்தின் உண்மைப் பொருளையறியமாட்டான்.

10. வேதங்கள் புராணங்கள் முதலியவை எல்லாம் மனிதர்களால் வாய்விட்டுக் கூறப்

பட்டதினுல் எச்சிலைப் போலாகிவிட்டன. ஆனல் **பிரம்மம்** என்னும் பரம்பொருள் மாத்திரம் அவ்விதம் எச்சில் ஆகவில்லை. ஏனெனில் அது இன்னதன்மையதென்று ஒருவராலும் இன்னும் கூறப்படவில்லை.

11. ஒரு புருஷனுக்கும் அவன் மனைவிக்குமுள்ள உறவை ஒரு சிறு பையனுக்கு விளங்கக் கூறுவது எவ்வளவு கஷ்டமோ, அவ்வளவு கஷ்டமாகும், பரமானந்தப் பரவசநிலையை இவ்வுலக வாழ்க்கையில் ஆழ்ந்தவனுக்கு விளக்குவதும்.

12. **ஸ, ரி, க, ம, ப, த, நி, ஸ** என்று சுலபமாய் வாயாற் சொல்லிவிடலாம்; ஆனல் வாத்தியத்தில் அந்த ஸ்வரங்களை வாசிப்பது அவ்வளவு சுலபமன்று. அதுபோல், மதத்தைப் பற்றிப் பேசுவது சுலபம்; ஆனல் அதை அனுஷ்டிப்பது கஷ்டம்.

13. துறவிகளைப்போல் சடை வளர்த்துக்கொண்டிருந்த ராமசந்திரன் என்னும் பிரம்மசாரியொருவர் தக்ஷிணேசுவர ஆலயத்தில்

ஸ்ரீராமகிருஷ்ணரை ஒரு சமயம் தரிசிக்கச் சென்றார். அங்கோர் ஆசனத்திலமர்ந்து 'சிவோஹம்! சிவோஹம்! (நான் சிவன்!)' என்று அடிக்கடி கூறுவதேயல்லாமல் வேறொன்றும் பேசாமல் மௌனமாயிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிது நேரம் மௌனமாய் அவரைக் கவனித்து விட்டுப் பின், "**சிவோஹம்** என்பதைப் பலமுறை ஜபித்தால் மாத்திரம் பயன் என்ன? ஒருவன் தன் ஹிருதய கமலத்தில் வீற்றிருக்கும் பகவானை ஆழ்ந்து தியானித்து அதன் பயனாய், தானென்னும் பற்று நீங்கித் தன்னுள்ளிருக்கும் சிவனை அறிந்த பின்பே இவ்வரிய மொழியை உச்சரித்தல் தகும். ஸ்வானுபூதியில்லாமல், வார்த்தையை மாத்திரம் உச்சரிப்பதனால் என்ன நன்மையுண்டாகும்? ஸ்வானுபூதிபெறும்வரைக்கும், ஈசுவரனை எஜமானனாகவும், தன்னை அடிமையாகவும் கருதுவது நல்லது" என்றார். இதையும் இதைப்போன்ற மற்றும் பல உபதேசங்களையும் கேட்ட பிரம்மசாரி, தான் செய்த பிழையை யறிந்து, முன்

னிலும் விவேகியானர். இந்தப் பிரம்மசாரி, அவ்விடத்தை விட்டுப் போவதற்கு முன், "சுவாமிகளின் உபதேசப்படி, இன்று முதல் ராமசந்திர பிரம்மசாரி ஈசுவரனைத் தன் எஜமானனுகவும் தன்னை ஓர் அடிமையாகவும் கருதுகின்ருன்" என ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய அறையின் சுவரில் எழுதி விட்டுச் சென்ருர்.

—

## இல்லறத்தானுக்கு இயைந்த ஸாதன முறைகள்

1. மறைந்து தேடிப் பிடிக்கிற (கண்ணும் பூச்சி) விளையாட்டிலே தாய்ச்சியை ஒருவன் தொட்டுவிட்டால் அவனுக்கு அந்த ஆட்டம் முடிந்துவிட்டது. அப்படித் தொட்டவன் எந்த விடத்துக்கும் கட்டுப்பாடில்லாமற் செல்லலாம்; ஓடவும் தேவையில்லை; கள்வனாகப் பிடிக்கப்படான். இங்ஙனமே உலக விளையாட்டில் (சம்சார வாழ்வில்) விளையாடிக் கொண்டு திரிகிற ஒருவர் கடவுளுடைய கமல பாதத்தைத் தொட்டுவிட்டால் (சாக்ஷாத்கார மடைந்தால்) இவ்வுலக பந்தத்திலிருந்து விடுபட்டவராவர். இறைவனுடைய அருளுக்குத் தம்மைத் தாமே அர்ப்பணஞ் செய்தவர்களை ஆசைகள் பந்திக்கமாட்டா.

2. கிராமங்களில் வசிப்போர் வயல்களிலும் வாய்க்கால்களிலும் மீன்பறி வைப்பதுண்டு. மூங்கிற் பின்னல் வழியாகத் தண்ணீர் வடிந்துகொண்டிருக்கும் பளபளப்பைக்

கண்டு, சிறு மீன்கள் அதிக சந்தோஷத் துடன் பறியினுள் நுழைந்துவிடும். அப்படி ஒருமுறை நுழைந்தவுடன், அவைகள் வெளியே வரமுடியாமல், பிடிபட்டு உயிரை யும் இழந்துவிடுகின்றன. ஒன்று இரண்டு மீன்கள் மட்டும், மற்ற மீன்களுக்கு ஏற்பட்ட கெடுதியைக் கண்டு, அவை போலத் தாமும் சிக்காமல் மற்றொரு வழியாகத் துள்ளித் தப்பிவிடுகின்றன. அதைப்போல் மதியீனர் கள் பகட்டான உலகப் போக்குகளில் சிக் குண்டு சிறிது காலம் உலக மாயையின் வச மாகிக் கிடந்து அதிகக் கஷ்டப்பட்டுக் கடைசி யில் துன்பத்தை யடைகிறார்கள். எவர் மற்ற வர்களுடைய அனுபவங்களைக் கண்டு அவற்றி னின்றும் நல்ல படிப்பினையேற்று, தாம் மண் பொன் பெண்ணாசைகளிலிருந்து விடுபட்டுக் கடவுளுடைய கமல பாதத்தில் சரணமடை கின்றனரோ அவரே உண்மை யானந்தத்தை அனுபவிப்பராவர்.

3. இவ்வுலகமானது கனவினால் அமைக்கப் பட்ட கட்டிடமென்று **இராமப்பிரசாதர்** உரைத்

தார். ஆனல் இறைவனிடத்து அன்பு செலுத்துபவருக்கு இவ்வுலகம் இன்பமாளிகையாகும். உண்பதும் உடுத்துவதும் சந்தோஷிப்பதுமாக நான் என் வாழ்நாட்களைக் கழிக்கிறேன். ஜனகமகாராஜர் தம் சிந்தையை ஈசனிடம் வைத்து உலகப் பற்றில்லாமல் சுகங்களையும் அனுபவித்தார். அவர் இவ்வுலகத்தை அரசாட்சி புரிந்து வந்தார். அவருக்கு ஒருவிதமான குறைவும் இருந்ததில்லை. அவருடைய வல்லமை எவ்வளவு பெரியது!

4. 'இல்வாழ்க்கையிலிருப்போன் கடவுளிடம் பக்தியுடையவனுயிருத்தல் கூடுமோ' என ஒரு மனிதன் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரை விசாரித்தான். அதனைக்கேட்ட பகவான் புன்னகையோடு சொன்னதாவது:- "நான் பிறந்த ஊருக்குச் சமீபமாயிருக்கும் கிராமங்களிலே, மகளிர் அவல் இடிப்பதைப் பார்த்திருக்கிறேன். ஒரு மாது ஒரு கையினல் உரலிலுள்ள அவலைக் கல்லிக்கொண்டும், மற்றொரு கையினல் தன் குழந்தையையணைத்துப் பாலூட்டிக்கொண்டும், அவல்

வாங்க வந்த ஒருத்தியைப் பார்த்து, 'பழைய கணக்கில் இவ்வளவு பாக்கி, இன்றைய கணக்கு இவ்வளவு' என்பன போன்ற விஷயங்களைப் பேசி வியாபாரம் நடத்திக்கொண்டும் இருப்பாள். இவ்வாறாகப் பல தொழில் செய்துகொண்டிருந்தாலும் கையில் உலக்கை விழுந்து நசுக்காத வண்ணம் மிக்க ஜாக்கிரதையா யிருப்பாள். அதுபோல எத்தொழில் செய்யும்போதும் இறைவனை மறவாது உலகத்தில் வாழ்ந்து வருவாயாக. மறந்தால் தீமை வந்தெய்தும்."

5. இவ்வுலக ஆசைகளின் நடுவில் இருந்துகொண்டே பக்தி ஸாதனைகள் செய்து மனத்தையடக்கி யாள்பவனே உண்மை வீரன். உண்மை வீரனுக்கே பெரிய பாரத்தைத் தன் தலைமீது தாங்கிச் செல்லும்போதும் எந்தத் திசையிலும் திரும்பிப் பார்க்க முடியும். அது போல மனத்தை யடக்கியாளும் மனிதன் உலகத்தில் செய்யவேண்டிய கடமைகளால் சூழப்பட்டிருந்தபோதிலும் தன் நோக்கத்தைக் கடவுளின்மீதே வைத்திருக்கிறான்.

6. வடதேசத்திலேயுள்ள பெண்கள், ஒன்றின் மேல் ஒன்றாக நாலைந்து தண்ணீர்க் குடங்களைத் தலைமேல் வைத்து நடந்து போம் பொழுது, உடன் போகிற பெண்களோடு தங்களுக்குள்ள இன்ப துன்பங்களைப் பற்றிப் பேசுவார்கள். ஆனால் அவர்களுடைய மனம் அதே சமயத்தில் குடங்களின் மீது நிலைத்திருக்கும். அவ்வண்ணமே நன்னெறியிற் செல்லுகிற மனிதனும் தன்னுடைய சிந்தையை எப்பொழுதும் நிலைதவறாது உண்மை வழியில் நிறுத்தவேண்டும்.

7. ஒருவகை சங்கீதக்காரன் ஒரே நேரத்தில் இரண்டு கருவிகளை யிசைப்பதைக் கண்டதில்லையா? இல்லறத்திலிருக்கும் மனிதர்களே! நீங்களும் அவ்வண்ணம் உங்களுடைய இரண்டு கைகளாலும் லௌகிக கருமங்களைச் செய்து கொண்டிருந்தாலும் உங்கள் மனத்தை ஈசனிடத்து வைத்து அவனுடைய திருநாமத்தை யுச்சரிப்பதை ஒருபோதும் மறந்து விடாதீர்கள்,

8. சோரம்போன ஒரு பெண்ணனவள் வீட்டுப் பணிவிடைகள் செய்துகொண்டிருக்கும் நேரத்திலும், தனது சோர நாயகனையும் அவன் வருவதற்குரிய நேரத்தையும் இடைவிடாது சிந்தித்துக் கொண்டிருக்கிறாள். அதுபோல இல்லறத்திலிருப்பவர்களே! நீங்கள் உங்களுக்குரிய எல்லாத் தொழில்களையும் செய்யுங்கள். ஆனால் உங்களது உள்ளத்தை மாத்திரம் இடைவிடாது இறைவனுடைய திருவடியில் நிறுத்துவீர்களாக.

9. உலகத்தில் பற்றற்று வாழ்வது எப்படியென்று அறிவாயா? சேற்றில் உலவும் மச்சத்தைப்போல வாழவேண்டும். அது சேற்றினுள் வாழுகின்றது; ஆனால், சேறு அதன் மேல் படிவதில்லை.

10. தராசில், எந்தத் தட்டில் கனமிருக்கிறதோ, அந்தத் தட்டுத் தாழும்; கனமில்லாத தட்டு உயரும். மனிதனுடைய மனம் தராசுக்கோல் போன்றது. இந்த மனத்தராசின் இரு தட்டுகளில் இரண்டுவித நிறைகள் தங்குகின்றன. உலகத்தின் மீதும், பட்டம்,

பெருமை இவைகளின் மீதும் உள்ள பற்று ஒன்று. மற்ருென்று அறிவு, பற்றின்மை, கடவுள் பால் அன்பு முதலியவை. முதற் கூறியவை அதிகமானுல், தராசுக்கோல் போல் மனம் உலகத்தின் பக்கம் தாழ்கிறது ; கடவுள் பக்கத்திலிருந்து நீங்கிச் செல்லுகின் றது. ஆனுல் இரண்டாவது பலமாக இருந் தாலோ, மனம் கடவுளிடம் சென்று உல கத்தை விட்டு நீங்குகின்றது.

11. ஒரு குடியானவன் நாள் முழுவதும் கரும்புத் தோட்டமொன்றிற்கு நீர்பாய்ச்சிக் கொண்டிருந்தான். வேலை முடிந்ததும், அவன் பார்த்தபோது, வயலிலே ஒரு துளி நீராவது பாயவில்லையென்று அறிந்தான். அவன் இறைத்த நீரெல்லாம், பக்கத்திலுள்ள சில எலி வளைகளின் வழியாய்த் தோட்டத்திற்கு வெளியே போய்விட்டன. கடவுளைப் பணிந்து கொண்டே, செல்வம் பெருமை முதலிய உலகபோகங்கள் மீதும் ஆசை கொள்ப வனுடைய நிலைமை இம்மாதிரியே. அவன் நாடோறும் பகவானைப் பிரார்த்தித்தபோதி

னும், யாதொரு (ஆத்ம ஞான) முன்னேற்ற மும் தான் அடையவில்லை எனக் கடைசியில் அறிவான். அவன் பக்தி முழுவதும் இவ் வாசைகளாகிய எலி வளைகள் வழியாய் வெளி யோடிப் போகின்றது.

12. ஒரு கம்பத்தைக் கெட்டியாகப் பிடித் துக் கொண்டு, ஒரு பையன் வெகு வேகமாக அதனைச் சுற்றி வருகிறான். அப்படிச் சுற் றும்போது அவன் ஞாபக முழுதும் கம்பத் தின் மேலேயே இருக்கிறது; கம்பத்தை உறுதியாய்ப் பிடித்துக்கொண்டிருக்கும் வரை யில், தான் கீழே விழப்போவதில்லை யென்ப தையும், கைப்பிடியை விட்டுவிட்டால் உடனே கீழே விழுந்துவிட வேண்டுமென்பதையும் அந்தப் பையன் அறிவான். அதுபோலவே உன் மனத்தைக் கடவுளிடம் நிலைநிறுத்தி, உலகத்தில் செய்யவேண்டிய கடமைகளைச் செய்து வா; அப்போது எல்லா அபாயங் களினின்றும் நீ நீங்குவாய்.

13. இவ்வுலக சுகம் அதிகரிக்கும் என் றெண்ணியே பலர் பூஜை முதலியவைகளைச்

செய்கிறார்கள். ஆனால் ஏதாவது கஷ்டம் நேரிடும்போதும், இறக்குந் தருவாயிலும் அவர்கள் ஈசனை மறந்து விடுகிறார்கள். சாதாரண காலங்களில் கிளியானது **ராதா கிருஷ்ணு** வென்று நாள் முழுவதும் சொல்லிக் கொண்டிருக்கும். ஆனால் அது ஒரு பூனை வாய்ப் படும்போது **ராதா கிருஷ்ணு** என்பதை மறந்து விட்டு, தன்னியற்கையின்படி கீச்சுக் கீச் சென்று கூவுகின்றது.

14. தண்ணீரில் படகு இருந்தால் யாதொரு அபாயமுமில்லை; ஆனால் படகில் தண்ணீர் நுழைந்துவிடக் கூடாது; நுழைந்தால் படகு மூழ்கிவிடும். அதுபோல, பக்தனொருவன் கிருகஸ்தனாக உலகத்தில் இருப்பதால் யாதொரு கெடுதலுமில்லை; ஆனால் உலகப் பற்று மாத்திரம் அவன் மனத்தில் நுழையும் படி விடக்கூடாது.

15. உலகம் எதைப்போன்றது? அது மரி மாங்காய் போன்றது; எல்லாம் தோலும் கொட்டையுமே—சதையேகிடையாது—அதை உண்பதால் வயிற்றுக் கடுப்புண்டாகிறது.

16. உன் கைகளில் எண்ணெயைத் தடவிக் கொண்டு, பலாப்பழத்தைப் பிளந்தால் அதன் பால் கைகளில் ஒட்டாது. அது போல நீ பக்தி யென்னும் எண்ணெயை உடல் முழுவதும் பூசிக்கொண்டாயானால், பெண்ணாசை, பொன்னாசைகளில் நீ அகப்படாமல் இவ்வுலகில் வாழலாம்.

17. தன்னைப் பிடிக்க வருபவனைப் பாம்பு தீண்டுகிறது. ஆனால் பாம்பாட்டியோ, யாதொரு அச்சமுமின்றி ஏழெட்டுப் பாம்புகளைத் தன் கழுத்தில் மாலைகளாக அணிந்து கொண்டு பல வழிகளில் அவைகளை ஆட்டி வைக்கலாம். அதைப்போலவே, விவேக வைராக்கியங்களை யடைந்த பின்னர் ஒருவன் கிருஹஸ்தனாக வாழ்ந்தால் அவன் இவ்வுலக பாசங்களினால் கெடுக்கப்படமாட்டான். பாம்பாட்டிக்கு விஷ பயமில்லாமற் செய்ய, மந்திரித்த விபூதி எப்படி உபயோகப்படுமோ அதுபோல விவேக வைராக்கியங்கள் இவன் விஷயத்தில் பயன்படும்.

18. ஒருவன் உள்ளி தின்றனென்பதை அவன் விடும் ஏப்பத்தின் மணமானது எப்படிக் காட்டுகிறதோ, அதுபோலவே ஒருவனுடைய எண்ணங்களை அவனுடைய பேச்சுக்கள் வெளிப் படுத்துகின்றன. இவ்விதமே உலகப் பற்றுள்ளவர்கள் ஆத்மஞான முதிர்ச்சி பெற்ற பெரியாரிடம் பேசும் பொழுதும் உலக விஷயங்களைப் பற்றியே அதிகமாகப் பேசுகிறார்கள்.

19. எல்லாவற்றிற்கும் மூலமாயிருப்பது **மனமே** என்பதை நீயுணர்க. ஒருவனை அறிஞன் அல்லது மூடனாக்குவதும், பந்தப்பட்டவன் அல்லது முக்தனாக்குவதும், தூயன் அல்லது தீயோனாக்குவதும், பாபி அல்லது புண்ணியவானாக்குவதும் மனமே. மனத்தை எப்போதும் கடவுளின் மீது வைத்திருக்கிறவனுக்கு வேறு ஸாதன முறைகளின் அனுஷ்டானம் வேண்டாம்.

20. பிரமஞ்ஞானம் அடைந்தவன் நிலைமை எத்தன்மையதென்று நீ அறிவாயா? அந்த

மனிதன் எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளை உள்ளும் புறமும் காண்கிறான்; அவன் கண்ணாடிக் கதவுகளுள்ள வீட்டில் வசிக்கிறான் என்னலாம்.

21. பகவத்கீதையை முற்றும் வாசிப்பதின் பலனும், **கீதா** என்னும் வார்த்தையைப் பத்து தடவை உச்சரிப்பதன் பலனும் ஒன்றே. **கீதா கீதா** வென்று பத்துத் தடவை சொல்லிப்பார். **த்யாகி த்யாகி**, (பற்றற்றவன்) என்றாகும். ஒரே வார்த்தையில் சொன்னால், கீதையானது **த்யாக**த்தைப் போதிக்கின்றது. எல்லாவற்றையும் விட்டுவிட்டு, பகவானுடைய பாதாரவிந்தங்களைச் சரணமாக அடைவாயாக.

---

# ஸாதனாதிகாரிகள்

1. ஒரு முழு மாம்பழம் அல்லது கொய்யாப்பழம் இருந்தால் அதனைக் கடவுளுக்கு நிவேதிக்கலாம்; வேறு வழிகளிலும் அவற்றை உபயோகிக்கலாம்; ஆனால் அந்தப் பழத்தினைக் காகம் ஒருதரம் கொத்திவிட்டால், அதனைக் கடவுளுக்கு அர்ப்பணம் செய்ய முடியாது; பிராம்மணனுக்கும் கொடுக்க முடியாது; ஒருவரும் உண்ணவும் கூடாது. அதுபோலவே, சிறு பையன்களையும் வாலிபர்களையும் கடவுளைத் தேடும்படி உற்சாகப்படுத்தவேண்டும். உலக ஆசைகளால் கெடாதபடியினால் அவர்கள் காகத்தினால் கொத்தப்படாத பழங்களைப் போன்றவர்கள். அவர்களுடைய மனத்திலே அவ்வித ஆசைகள் ஒருமுறை நுழைந்துவிட்டால், அவர்களை மோக்ஷமார்க்கத்தைக் கைப்பற்றும்படி செய்வது மிகவும் கஷ்டம்.

2. இளைஞர்களிடம் ஏன் எனக்கு அவ்வளவு அன்பு? ஏனெனில், அவர்கள் 16 அணா

வுக்கும் (தங்களுடைய மனம் முழுவதும்) சொந்தமானவர்கள்; அவர்கள் வயது முதிர முதிர, அது பல பங்குகளாகப் பிரிக்கப்படுகின்றன. கிருகஸ்தனுடைய மனத்தில் எட்டணு (அதாவது பாதி) அவன் மனைவியைப் பற்றியே நிற்கிறது. குழந்தையொன்று பிறந்தால், அது நாலணு (கால்பங்கு) கவனத்தை இழுத்துவிடுகிறது. பாக்கியுள்ள நாலணு (அதாவது மனத்தின் மற்றைய கால் பாகம்) பெற்றோரைப் பற்றியும், உலகத்தில் கீர்த்தி, ஆடை, ஆபரணம் முதலியவற்றிலும் போய்விடுகின்றது. ஆகையினல் இள மனமே கடவுளைச் சுலபமாக அறியமுடியும். வயதானவர்களுக்கு அவ்வாறு செய்தல் கஷ்டம்.

3. கிளிக்கு வயதாகி அதன் தொண்டை நரம்பு கெட்டியாகிவிட்டால் அதற்குப் பாடக் கற்றுக்கொடுக்க முடியாது. அது இளமையாயிருக்கும்போதே பாடக் கற்றுக்கொடுக்க வேண்டும். அதுபோலவே வயோதிகப் பருவத்தில் கடவுளின்மீது மனத்தை நிறுத்து

வது கஷ்டம். ஆனல் இளமையில் அவ்வாறு செய்யமுடியும்.

4. ஒரு படி பாலில் வீசம்படி (பதினறில் ஒரு பாகம்) ஜலம் கலக்கப்பட்டிருந்தால், அப் பாலைக் கஷ்டமின்றி மிகக் குறைந்த விறகுச் செலவில் திரட்டுப் பாலாக்கலாம். ஆனல் ஒரு படி பாலில் முக்காற்படி ஜலமிருந்தால் அதனைச் சீக்கிரத்தில் கட்டியாக்க முடியாது; விறகும் அதிகமாகச் செலவாகும். இளவயதினர் மனத்தில் உலகப் பற்றுகள் மிகவும் அற்ப அளவே கலந்திருப்பதால் அதைச் சுலபமாகக் கடவுளிடம் திருப்பலாம். ஆனல் உலக ஆசைகளே மிகவும் அதிகமாக நிறைந்திருக்கும் வயோதிகர்கள் விஷயத்திலே இவ்வாறு செய்ய முடியாது.

5. இள மூங்கிலைச் சுலபமாக வளைக்கலாம்; முற்றின மூங்கிலை வளைக்க முயன்ருலோ அது ஒடிந்துவிடுகின்றது. அதுபோல இள மனமுடையவர்களை ஈசுவரன் பக்கம் வளைத்துத் திருப்ப முடியும்; ஆனல் வயது முதிர்ந்தவர்

களுடைய மனமோ அவ்விதம் வளைக்கப்பட்டால், பிடிப்பினின்றும் தப்பி ஓடிவிடுகிறது.

6. மனிதன் மனமானது கடுகுப் பொட்டலம் போன்றது. அந்தப் பொட்டலம் கிழிந்து, கடுகு நாலா பக்கங்களிலும் ஓடிவிட்டால், எப்படி அதை ஒன்று சேர்ப்பது கஷ்டமான காரியமோ, அதுபோல மனம் பல வழிகளிற் சென்று உலக விஷயங்களில் ஈடுபட்டிருக்கும்போது அதை ஒன்ருய்க் குவித்து ஒரு நிலைப்படுத்துவது சுலபமான காரியமன்று. ஓர் இளைஞனுடைய மனம், பலவழிகளில் செல்லாமலிருப்பதால், ஏதாவதொன்றின் மீது அதைச் சுலபமாய் நிறுத்தலாம். ஆனல் ஒரு கிழவனுடைய மனமானது, உலக விஷயங்களிலேயே முழுவதும் அமர்ந்திருப்பதனுல், அவைகளினின்றும் நீக்கி, அதைக் கடவுளின் மீது செலுத்துவது மிகக்கஷ்டம்.

7. வெண்ணெய் எடுக்க, சூர்யோதயத்திற்கு முன்னமேயே கடையவேண்டும். பகல் வேளையில் கடைந்தால் வெண்ணெய் நன்ருய்ச் சேராது. அதுபோல, சிறு வயதிலேயே,

பக்தி மார்க்கத்தைக் கைக்கொண்டு, மனத்தைக் கடவுளிடம் செலுத்துபவர்களே, பகவானுடைய தரிசனம் பெறுவர்.

8. ஈரமான தீக்குச்சியைப் பலமுறை தேய்ப்பினும் நெருப்புப் பற்ருது; துண்டு துண்டாய் ஒடிந்துதான் போகும். ஆனல், உலர்ந்த குச்சியோ, கொஞ்சம் தட்டினுலும், உடனே பற்றிக்கொள்ளும். உலகப்பற்றினல் கெடாத, குற்றமற்ற, பரிசுத்தமான மனம் உலர்ந்த குச்சியை ஒக்கும். பகவான் திருநாமத்தை அசதியாகக் கூறினுலும் அத்தகைய மனத்தில் உடனே பக்தி யெனும் நெருப்புப் பற்றுகிறது. ஆனல் உலக ஆசைகளுள்ளவன் மனமோ, காம காஞ்சனங்களில் (பெண்ணசை பொன்னசை) ஊறியிருப்பதால் ஈரமான தீக்குச்சியைப் போன்றுள்ளது. அவனுக்குக் கடவுளைப் பற்றி நூறு முறை உபதேசித்தாலும், அன்பெனும் தீ பற்ருது.

---

## ஸாதகர்களில் பல வகுப்பினர்

1. இருவிதமான ஸாதகர்களை நாம் காண்கிறோம்—ஒரு வகுப்பினர் குரங்குக் குட்டி போன்றவர்; மற்றொருவர் பூனைக் குட்டி போன்றவர். குரங்குக் குட்டி தன் தாயைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறது. பிறகு தாய்க் குரங்கு அதை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு எடுத்துக்கொண்டு போகிறது. பூனைக் குட்டியோ, தாயைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்வதில்லை; ஆனால் தாய்ப் பூனை தன்னை எங்கேயாவது விட்டுவிட்டால் '**மியா மியா**' வென்று கத்துகிறது. அப்போது தாய்ப் பூனை வந்து குட்டியின் கழுத்தைக் கௌவிக்கொண்டு தனக்கு விருப்பமான இடத்திற்கு எடுத்துக்கொண்டு போகிறது. அதுபோல, ஞான மார்க்கம் அல்லது நிஷ்காமிய கர்மத்தைக் கைக்கொள்ளும் ஸாதகன், முக்தி நிலை யடைவதற்குத் தன் சொந்த முயற்சியையே நம்பியிருக்கிறான். ஆனால் பக்தி மார்க்கத்தைக் கைக்கொண்டொழுகு

பவன், எல்லாவற்றிற்கும் பகவானே கர்த்தா என்றறிந்திருக்கிறான்; ஆகையினால் அவன் முழு நம்பிக்கையுடன் பகவானுடைய பெருங் கருணையைச் சரணமாக அடைகிறான். முற் கூறியவன் குரங்குக் குட்டி போன்றவன். பிற்கூறியவன் பூனைக் குட்டியைப் போன்ற வன்.

2. ஒரு வீட்டு எஜமான் வீட்டிலிருப்பவர் களுக்கு (உறவு முறையில்) வெவ்வேறு வித மாகக் காணப்படுகிறான். ஒருவருக்கு அவன் தகப்பன், மற்றொருவருக்கு மாமன், இன் னொருவருக்கு மைத்துனன், வேறொருவருக்கு மாமனார் எனப் பலவிதமாக இருக்கிறான். அதுபோலவே, ஒரே கடவுள், தமது பக்தர் களுக்குப் பலவிதமாகத் தோன்றி, வெவ் வேறு விதங்களில் பூஜிக்கப்படுகிறார். சிலர் பகவானைத் தம் நண்பராகக் கருதி அவ்வாறே பக்தி செய்கிறார்கள்; சிலர் அவனை எஜமான னாக எண்ணுகிறார்கள்; சிலர் குழந்தையாக வும், சிலர் நாயகனாகவும் மற்றும் பலர் பல வேறு விதமாகவும் கருதுகிறார்கள்.

3. நீ எதைத் தேடுகிறாயோ அதையே அடைவாய். கடவுளைத் தேடுபவன் அவரை அடைகிறான்; செல்வத்தையும் செல்வாக்கையும் தேடுபவன் அவற்றை யடைகிறான்.

4. ஒரு பிச்சைக்காரன் ஓர் அரசனுடைய மாளிகைக்குப் போய், ஒரு பூசனிக்காய் அல்லது சுரைக்காய் போன்ற அற்பப் பொருள்களை இரப்பானானால், அவன் அசட்டுத்தனமாக நடந்துகொள்கிறான் என்றே கூறவேண்டும். அதுபோல, பக்தனொருவன் ராஜாதி ராஜனான ஈசுவரன் திருமுன் நின்று உண்மை ஞானம், பகவத் பிரேமை போன்ற விலையில்லாப் பரிசுகளைக் கேளாது, அற்பமான அஷ்டமா ஸித்தி முதலியவைகளைக் கேட்பானாயின் அவன் மூடத்தனமாய் நடக்கிறானென்றே நாம் சொல்லவேண்டும்.

5. ஒரு ஸாதகனின் உண்மை நிலையை, அதாவது, அவன் பக்தி மார்க்கத்தை அனுசரிப்பவனா ஞான மார்க்கத்தை அனுசரிப்பவனா என்பதை அறிவது வெகு கஷ்டம். யானைக்கு இருவிதப் பல்வரிசைகளுண்டு -

வெளியே வெறும் அழகுக்காக இருக்கும் தந்தங்களும், உள்ளே தின்பனவற்றை அரைப்பதற்கு உபயோகப்படும் பற்களும். இது போல், ஸாதகன், பல வேளைகளில் தன் இயற்கையை மறைத்து வேறு குணத்தைக் கையாண்டவனாக வெளியில் காட்டிக் கொள்கிறான்.

6. இரகஸ்ய யோகிகள், பகிரங்க யோகிகள் என இருவகையார் இருக்கிறார்கள். முதல் வகையினர்கள், ஸாதனைகளை, இரகசியமாகவே செய்து தங்களைப் பிறருக்குக் காட்டிக்கொள்ளாமலிருக்கிறார்கள். இரண்டாவது வகுப்பினர், யோகி யென்பதைக் காட்டும் வெளி யடையாளங்களைக் கொண்டிருக்கிறார்கள். உதாரணமாக அவர்கள் யோகதண்டம் ஒன்று வைத்துக் கொண்டும், ஆத்மஞான விஷயங்களைப் பற்றி வியவகரித்துக் கொண்டுமிருப்பர்.

---

## உண்மைப் பக்தன்

1. ஒரு கல்லானது நீரில் பல்லாயிர மாண்டுகளிருந்தபோதிலும், நீர் அதனுள் ஊறுது; ஆனல் களிமண் நீருடன் சம்பந்தப் பட்டவுடனே, அதனுடன் கலந்துவிடுகிறது. அதுபோல, பல கஷ்டங்களின் நடுவிற்கூட, உறுதியான பக்தியுடையவர்களின் மனமானது கலங்குவதில்லை; ஆனல் நம்பிக்கை குறைந்தவனே, ஓர் அற்ப காரியத்தினலும் சுலபமாக மனங் கலங்கி விடுகிறன்.

2. பிரஹ்லாதனுடைய பிரார்த்தனைகளினலும் தோத்திரங்களினலும், பகவான் மகிழ்ச்சியடைந்து அவனுக்கு என்ன வரம் வேண்டுமெனக்கேட்டார். அதற்குப் பிரஹ்லாதன் "பகவானே! என்னை வருத்தியவர்களை மன்னித்தருளவேண்டும்; அவர்களைத் தண்டிப்பதால், தாங்கள் தங்களையே தண்டித்துக் கொள்ளுகிறீர்கள்! ஏனெனில் தாங்களே எல்லாருள்ளும் வசிக்கிறீர்கள்!" என்றுன்.

3. பிரம்ம ஸமாஜத்தின் தலைவரும் பக்தருமான கேசவ சந்திரஸேனரைக் காண ஸ்ரீராமகிருஷ்ணர் விரும்பினார். அப்போது கேசவ சந்திர ஸேனர் தமது சிஷ்யர்களுடன் பெல்கேரியா என்னுமிடத்திலுள்ள ஜய கோபால ஸேனருடைய நந்தவன பங்களாவில் தங்கியிருந்தார். ஹிருதய முகர்ஜியுடன் ஸ்ரீராமகிருஷ்ணர் வண்டியேறி அவ்விடத்திற்குச் சென்றார். அச்சமயம் கேசவ சந்திர ஸேனர் தமது சிஷ்யர்களுடன் தோட்டத்திலுள்ள குளத்தில் குளிப்பதாயிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் கேசவ சந்திரஸேனரைப் பார்த்து "இங்கிருப்பவர்களில் அவரொருவருக்குத்தான் வாலறுந்து விழுந்துவிட்டது" என்றார். இதைக் கேட்ட கேசவ சந்திர ஸேனரின் சிஷ்யர்கள் 'கொல்' என்று சிரித்தனர். உடனே கேசவர், "நீங்கள் இவ்விதம் சிரிக்கக்கூடாது; அவர் கூறிய மொழிகளுக்கு ஆழ்ந்த பொருள் ஏதாவதிருக்கும்" என்று கூறித் தம் சிஷ்யர்களைக் கடிந்து கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் தாம் கூறி

யதைப் பின்வருமாறு விளக்கினர் :—"தவளைக் குஞ்சொன்றின் வால் தானாகவே அறுந்து விழும் வரையிலும், அது நீரில் மாத்திரந் தான் வசிக்கமுடியும்; ஆனல் வால் விழுந்து விட்ட பிறகு அது நீரிலும் நிலத்திலும் வசிக்க முடியும். அதுபோல, பகவத்தியானத்தினல் எவனுடைய அறியாமை என்னும் வால் அறுந்து விழுந்துவிட்டதோ அவன், தன்னிச்சைப்படி ஸச்சிதானந்த சாகரத்திலும் முழுகலாம், உலகத்திலும் வாழலாம்"

---

# ஸாதனைகளுக் கேற்படும் தடைகள்

1. ஜாடியின் (நீர் வைக்கப்படும் பாத்திரம்) அடியில் வெகு சிறிய துவாரமொன்றிருந்தாலும் ஜாடியிலுள்ள நீரெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாக வெளியே போய்விடும்: அதுபோல ஸாதகனிடம் உலகப்பற்று சிறிது இருந்தாலும் அவனுடைய முயற்சியெல்லாம் வீணாகும்.

2. களிமண்ணை எந்த உருவமாகவும் செய்யலாம்; ஆனால் சுட்ட மண்ணை அவ்வாறு செய்தல் இயலாது. அதுபோல உலக ஆசைகளென்னும் தீயினால் சுடப்பட்ட இதயத்தில் ஆத்மஞான எண்ணங்கள் சிறிதளவும் பதியாவென்க.

3. சர்க்கரையையும் மணலையும் ஒன்றாகக் கலந்து விடலாம். ஆனால் எறும்பு மணலை நீக்கி, சர்க்கரையைத் தின்கிறது. அதுபோல பக்தர்களும் பரமஹம்ஸர்களும் அநித்யமான

**காமகாஞ்சனங்களை** * நீக்கி, நித்தியமான சச்சிதானந்தத்தையே நாடுகிறார்கள்.

4. எண்ணெய் தடவிய காகிதத்தின் மேல் எழுதமுடியாது. அதுபோல, பெண் பொன் ஆசைகளென்னும் எண்ணெயினால் கெடுக்கப்பட்ட மனமானது, ஸாதனைக்குத் தகுதியாகாது. ஆனால் அந்த எண்ணெய்க் காகிதத்தின் மீது சுண்ணாம்பைத் தடவி விட்டால் எழுதமுடியும். அதுபோல மனத்தின் மீது தியாகம் என்னும் சுண்ணாம்பைத் தடவினால், அது ஸாதனைகள் செய்வதற்குத் தக்கதாகும்.

5. ஸாதனை செய்யும்போது, ஆத்மஞானத்தைப்பற்றிச் சிறிதும் யோசியாதவர்களுடன் சேராதே. அப்படிப்பட்டவர்கள், கடவுளை வணங்கித் தியானம் செய்பவர்களை ஏசி, பக்தியையும் பக்தர்களையும் ஏளனஞ் செய்கிறார்கள். அவர்களை விட்டு விலகி நில்.

6. வேறொரு புது மிருகம் பசுமந்தைக்குள் நுழைந்தால், பசுக்களெல்லாம் ஒன்று

---

* பெண்ணாசை பொன்னாசை.

சேர்ந்து அதை எதிர்ப்பதனல் அது ஓடிவிடு கின்றது. ஆனல் வந்த பிராணி ஒரு பசு வாகவே இருந்தால், மற்றப் பசுக்களும் அது வும் ஒன்றுக்கொன்று நக்கிக்கொடுத்து சிநேக மாகி விடுகின்றன. அதுபோல, பக்தனெருவன் மற்றெரு பக்தனைச் சந்தித்தால் அவர்கள் ஆத்மஞான விஷயங்களைப்பற்றிப் பேசி, ஒருவர் மற்றெருவருடைய தரிசனத்தால் ஆனந்தங் கொண்டு பிரிய வருத்தப்படுகிறார்கள். ஆனல் பக்தனெருவன் ஏளனஞ்செய்து திரியும் ஒருவனேடு நட்புரிமை கொண்டாட விரும்புவதில்லை.

7. ஆழமேயில்லாத ஒரு குளத்திலிருந்து ஒருவன் தண்ணீர் குடிக்க விரும்பினல் ஜலத்தைக் கலக்காமல் மெதுவாக மொள்ளவேண்டும். நீரைக் கலக்கினல், அடியிலிருக்கும் வண்டல் கிளம்பி, ஜலம் சேருய்விடும். அது போல, கடவுளை அறிய நீ விரும்பினல், உன்னுடைய குருவினிடம் நம்பிக்கை வைத்து, பக்தி சாதனங்களைச் செய்துகொண்டு போ. வேத சாஸ்திரங்களைப் பற்றித் தர்க்கித்தல்,

வீண்வாதம் புரிதல் இவைகளில் உன் சக்தியைச் செலவழிக்க வேண்டாம். நம்முடைய சிறு மூளை சீக்கிரத்திலேயே கலங்கி விடுகின்றது.

8. பிசாசு பிடித்தவன்மேல் மந்திரித்த கடுகைத் தெளிப்பதால், பிசாசு ஓட்டப்படுகின்றது. ஆனால், கடுகையே பிசாசு பிடித்திருந்தால் அது எப்படிப் பிசாசை ஓட்டும்? ஈசுவரனைப்பற்றி நினைக்கவேண்டிய மனமே உலக விஷயங்களின்மீது பற்றுக்கொண்டிருந்தால், ஆத்ம ஸாதனைகளில் சித்திபெற முடியுமென்று நீ எவ்வாறு எதிர்பார்க்கக் கூடும்?

9. உன்னுடைய மனத்திலெழும் எண்ணத்திற்கும், உன் பேச்சிற்கும் ஒற்றுமை யிருக்கட்டும். இதுதான் சரியான ஸாதனம். அப்படிக்கின்றி "உலகமே உன்னுடைய எல்லாப் பொருளும்" என்று நீ உன் மனத்தில் உறுதியாய் நினைக்கும்பொழுது "பகவானே! நீயே என் பொருள் எல்லாமும்" என்று வாயால் மாத்திரம் சொல்லிக் கொண்டிருந்தா

யானல், உன்னுடைய ஸாதனங்களெல்லாம் பயனற்றுப் போகும்.

10. ஊசியின் காதில் நூலைக் கோக்கும் போது நூலின் முனை கொஞ்சம் பிரிந்திருந்தாலும், கோக்கமுடியாது. அதுபோல, ஒருவனிடம் ஆசையென்பது சிறிதிருந்தாலுங் கூட அவன் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைய முடியாது. மனமானது ஆசைகளால் அலைக்கப்படாது பரிசுத்தமாயிருந்தால்தான் ஒருவன் பரம்பொருளை அறிதல் கூடும்.

11. மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைய விரும்புபவன் எக்காரணத்தைக் கொண்டும் பெண், பொன் முதலியவைகளின்மீது பற்றுதல் கொண்டிருக்கக் கூடாது. இம்மாதிரி சிறிது பற்றிருந்தாற்கூட ஒருவர் **முக்தர்** ஆவது முடியாது. ஒரு வாணலியில் மணலுடன் சேர்த்து நெல்லைப் பொரிக்கும்போது, வாணலியை விட்டுத் துள்ளிப் பொரிந்து விழும் நெற் பொறிகளில் நெருப்புக்கறை கொஞ்சமேனு மிராது. வாணலியிலிருக்கும்

மற்ற நெல் தானியங்களோவெனில், சூடான மணலினுல், எங்கேயாவது தீய்க்கப்பட்டிருக்கும்.

12. அற்பமான காமியார்த்தங்களை (செல்வம், கீர்த்தி, பிள்ளைப்பேறு முதலியவைகளை) விரும்பி ஒருவரும் பக்தி ஸாதனைகளை மேற்கொள்ளக் கூடாது. பகவானெருவனை நாடுபவன் மாத்திரமே தன்னுசை பூர்த்தியடையப் பெறுகிறுன்.

13. எப்படி ஒரு பொருளானது காற்றினுலலைக்கப்பட்ட நீரில் பிரதிபிம்பிக்காதோ, அதுபோல, ஆசையென்னும் காற்றினுலசைக்கப்பட்ட மனமென்னும் ஏரியில் ஈசுவரனுடைய பிரதிபிம்பம் தோன்றுது. மனிதன் மூச்சுவிடும்போதுகூட மனத்தில் அசைவு ஏற்படுகின்றது. ஆகையினுல் தான் யோகிகள் கடவுளைப்பற்றித் தியானஞ் செய்வதற்கு முன்பு, மூச்சையடக்குவதில் தங்கள் முழுக் கவனத்தையுஞ் செலுத்துகிறுர்கள்.

14. தன் எண்ணங்களை எவனெருவன் மறைக்கவில்லையோ, அவன்தான் மோக்ஷ

ஸாம்ராஜ்யத்திற்குள் நுழைகிறான். அதாவது, கபடமற்ற தன்மையும், முழுநம்பிக்கையுமே அந்த ராஜ்யத்திற்கு அழைத்துச் செல்லும் பாதைகளாகும்.

15. பாம்பொன்று ஒருவன் முன் எதிர்ப்படும்போது, "ஸர்ப்பங்களின் அதிதேவதையான மானஸ தேவியே! உம் திருமுகத்தை மறைத்து வாலை மாத்திரம் காட்ட வேண்டுகிறேன்" என்று சொல்வது வழக்கம். அதுபோல மங்கைப் பருவமடைந்த பெண் ஒருத்தியை சந்திக்கும்போது, நீ அவளை வணங்கி "அம்மா" என்றழைத்து, அவள் முகத்தைப் பாராது திருவடிகளையே பார்க்கவேண்டும். அப்படி நீ செய்தால் காமவலைக்குள் விழமாட்டாய்.

16. சந்நியாசிகளும் பக்தர்களும், ஒரு பெண், பதிவிரதையாயிருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி, ஜகன்மாதாவின் திருவுருவமெனவே கருதவேண்டும்.

17. தனித்த ஓர் இடத்தில் மங்கைப்பருவமுள்ள ஒரு பெண்ணைக் கண்டால், அவளைத்

தன் மனத்தில் தாயென வணங்கிப் போகின்றவனே உண்மைத் துறத்தற் றன்மையை அடைந்திருக்கின்றான். ஆனால், இவ்வாறு பலரறியும்படி பகிரங்கமாகச் செய்கிறவன் உண்மைத் துறவியாகமாட்டான்.

18. ஓர் ஆட்டின் தலையை வெட்டிவிட்டால், முண்டமானது சிறிது நேரம் (உயிருள்ளது போல்) துடிக்கின்றது. ஆடு இலேசில் உயிர் விடுவதில்லை. அதுபோலவேதான் மனிதனுடைய அகங்காரமும்.

19. ஒருவன் தன்னுள்ளிருக்கும் அகங்காரத்தைத் துறப்பது மிகவும் கடினம். உள்ளிப்பூண்டு அல்லது வெங்காயத்தை ஒரு பாத்திரத்தில் வைத்திருந்தோமானால், அப்பாத்திரம் பலமுறை கழுவப்பட்டபோதிலும், சிறிதாவது பூண்டு அல்லது வெங்காயத்தின் நாற்றம் இருக்கிறது. அதுபோலவே, ஒவ்வொருவரிடமும், என்னதான் அகற்ற முயன்றாலும், சிறிது அகங்காரமாவது இருக்கும்.

20. உண்மைச் சந்நியாசி அல்லது தியாகியின் அடையாளமென்ன? இருவரும் பெண்,

பொன் இவைகளிலிருந்து முற்றிலும் விடு பட்டவர்களா யிருக்கவேண்டும். ஆனுல் கொஞ்சமேனும் பொன்மீது பற்று அல்லது காமம் இருக்குமானுல் அவர்கள் செய்யும் ஸாதனைகளெல்லாம் பலனற்றுப் போகும்.

21. கடவுள், வேண்டினேர் விரும்பியதை அளிக்கும் வன்மையுள்ள **கற்பக விருக்ஷத்**தைப் போன்றவராகையால், ஒருவன் ஆத்ம ஸாதனத்தால் தன் உள்ளத்தை சுத்தமாக்கிக் கொண்ட பிறகு, உலகப்பற்றையெல்லாம் விட்டுவிடுவதில் வெகு கவனமாய் இருக்க வேண்டும். இந்தக் கதையைக் கேள் :—யாத்திரை செய்துவந்த ஒரு பிரயாணி, ஒரு சமயம் பெரிய மைதானத்தை அடைந்தான். வெயிலில் வெகு நேரம் நடந்துவந்தபடியால், அவன் மிகவும் களைத்து வியர்த்திருந்தான் ; ஆகையால் ஒரு மரத்தடியில் களைப்பாற உட்கார்ந்தான். "இங்கே உறங்குவதற்கு மெதுவான படுக்கையொன்று கிடைக்குமானுல் எவ்வளவு சுகமாக இருக்கும் !'' என்று நினைத்தான். அந்தப் பிரயாணிக்குத் தான் ஓர்

கற்பக விருக்ஷத்தடியில் உட்கார்ந்திருப்பது தெரியாது. மேற்கூறிய எண்ணம் அவன் மனத்தில் தோன்றின உடனே, அழகான படுக்கையொன்று அவன் பக்கத்தில் இருப்பதைக் கண்டான். இது அவனுக்கு ஆச்சரியம் விளைவித்தபோதிலும், படுக்கையில் படுத்துக்கொண்டான். தன் கால்களைப் பிடிக்க அழகிய பெண்ணொருத்தி அங்கு வந்தால் மிகவும் ஆனந்தமாயிருக்குமே என்று அவன் நினைத்தான். அவ்வெண்ணம் தோன்றின வுடனே, ஒரு பெண் அவன் காற்பக்கம் உட்கார்ந்து அவன் பாதங்களை மெதுவாகத் தடவிக்கொண்டிருந்தாள். பிரயாணிக்குண்டான மகிழ்ச்சியை அளவிட முடியாது. சிறிது நேரத்திற்கெல்லாம் பசி தோன்ற, "நான் விரும்பியவையெல்லாம் கிடைத்திருக்கின்றன; உணவு கொஞ்சம் கிடைக்காதா?" என்று நினைத்தான். உடனே, சுவையுள்ள பலகாரங்கள் பல, அவன் முன் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டான். உடனே சாப்பிடவாரம்பித்து வயிறுர உண்டபின்பு, மறுபடி

யும் படுக்கையின்மேல் படுத்துக்கொண்டான். பிறகு அன்று நடந்தவைகள் எல்லாவற்றை யும் பற்றிச் சிந்திக்கலானுன். இவ்வாறு யோசிக்கும்பொழுது "திடீரென்று ஒரு புலி தோன்றி என்னை எதிர்க்குமானுல்—" என்று நினைத்தான். உடனே புலியொன்று தோன்றி அவன்மீது பாய்ந்து கழுத்தை முறித்து அவன் இரத்தத்தைக் குடிக்க ஆரம்பித்தது; பிரயாணியும் இறந்தான். பொதுவாக ஜனங் களின் கதியும் இவ்வாறுதான். நீ தியானம் செய்யும்போது மனிதர், பணம், கீர்த்தி ஆகிய இவைகளுக்காக வேண்டுவாயானுல் உன் இச்சைகள் ஒருவாறு பூர்த்தியாகலாம்— ஆனுல் நீ கேட்கும் வரங்களுக்குப் பின்னே புலி பதுங்கி யிருப்பதை மனதில் வை. நோய், உறவினர் இறத்தல், பழி, செல்வம் என்னும் இப்புலிகள் உயிருள்ள புலிகளைவிடப் பன் மடங்கு கொடியவைகளாம்.

22. ஒரு மனிதனுக்கு உலகத்தைத் துறந்து விட வேண்டுமெனத் திடீரென்று தோன் றிற்று. அவன் தன் நண்பர்களைப் பார்த்துத்

தனக்கு உலகத்தின்மீது யாதொரு பற்று மில்லையென்றும், பகவானைத் தியானம்செய்ய ஏகாந்தமான இடத்திற்குச் செல்ல விரும்பு வதாகவும் தெரிவித்தான். சிறந்த இந்த ஏற் பாட்டிற்கு அவர்கள் எல்லோரும் தடை யின்றி இசைந்தார்கள். ஆகவே, அவன் தன் இல்லத்தைவிட்டு நீங்கித் தனித்த ஓர் இடம் சென்று, பன்னிரண்டு ஆண்டுகள் கடுமை யான தவம் செய்தான். இதனுல் அவனுக் குச் சில சித்திகள் கிடைக்க, வீட்டுக்குத் திரும்பினுன். வெகு காலஞ்சென்று திரும்பி வந்த அவனைக் கண்ட நண்பர்கள் மகிழ்ச்சி யடைந்தனர். அவர்கள் பேசிக் கொண்டிருக் கும்போது, 'கடுந்தவஞ் செய்து என்ன ஞானம் அடைந்தாய்?' என்று அவனைக் கேட்டார்கள். அவன் புன்சிரிப்புடன், அவ் வழியே போய்க் கொண்டிருந்த யானையிடம் சென்று அதைத் தொட்டு, "யானையே, நீ இறக்கக் கடவாய்!" என்றுன். யானை உடனே உயிரற்று விழுந்தது. சிறிது நேரம் கழித்து அவன் மறுபடியும் யானையைத்

தொட்டு, "யானையை உயிர் கொண்டெழுந்திரு!" என்முன். உடனே யானை உயிர் பெற்று எழுந்து நின்றது. பிறகு அவன் தன் வீட்டினருகே ஓடிக் கொண்டிருந்த ஆற்றினிடம் சென்று சில மந்திரங்களை உச்சரித்து, நீரின்மேல் நடந்து அக்கரை சென்று திரும்பி வந்தான். இதைக் கண்ட அவனுடைய நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர். ஆயினும் அவர்கள் அவனைப் பார்த்து, "அண்ணே! நீ செய்த தவத்தினல் யாதொரு பலனுமில்லை; யானை உயிருடனிருந்தாலும் இறந்தாலும் உமக்கென்ன? நீர் பன்னிரண்டு வருடங்கள் தவம் செய்து ஆற்று நீரைக் கடக்கக் கற்றீர்! நாங்களோ படகுக்காரனுக்குக் காலணு கொடுத்துக் கடந்துவிடுகிறோம்; இதனல் உம் கஷ்டங்களெல்லாம் வீணகப் போயின வென்றே சொல்லவேண்டும்" என்று கூறினர்கள். இவ்வாறு அவர்கள் கடிந்தும் ஏளனமாகவும் கூறுவதைக் கேட்டதும், அவன் அறிவுபெற்று, தனக்குள் "உண்மையாகவே, இந்த சித்திகளால் யாது பயன்?" என்று ஆலோசித்து

வீட்டை மறுபடியும் துறந்து, இம்முறை கடவுளை யடையும் கருத்துடன் கடுந்தவஞ் செய்யச் சென்றான்.

23. ஒருவன் தன்னை வெகு சமர்த்தனாகக் கருதுவது மூடத்தனமாகும். காகமானது ஒரு வழியில் சமர்த்துடையதே; தான் சமர்த்தனென்றும் அது நினைக்கலாம். மலத்தையுண்டுதான் அது பிழைக்க வேண்டியிருக்கிறது. அதுபோல, அறிவிலியானவன், உலகத்தைப்பற்றின அறிவு தனக்குள்ளதென்று தன்னைத் தானே கெடுத்துக் கொள்ளுகிறான். அவனுடைய சாமர்த்தியமெல்லாம் மிகவும் கேவலமான வஞ்சகந்தான்.

24. ஒரு நாள், ஒரு கையில் ஒரு ரூபாயும், மற்றொரு கரத்தில் களிமண் கட்டியும் வைத்துக் கொண்டு கங்கா நதிக்கரையில் நின்று (இரண்டிற்குமுள்ள வேறுபாட்டைப்பற்றி) மனத்திலே ஆலோசித்து, ரூபாய்க்கும் களிமண் கட்டிக்கும் யாதொரு வேற்றுமையுமில்லை என்னும் முடிவிற்கு வந்தேன். அதனால் இரண்டையும் நதிக்குள் எறிந்துவிட்டேன்.

இப்படிச் செய்தது லக்ஷ்மிதேவிக்கு அபசாரம் செய்ததாயிருக்குமோவென்று என் மனத்தில் ஐயமுண்டாயிற்று—ஸ்ரீதேவி என் வயிற்றுப் பிழைப்பிற்கு வழியில்லாமற் செய்துவிடலா மன்றோ? அப்போது என் மனத்தில் ஓர் எண்ணம் உதித்தது; நான், 'தேவீ! என் னுள்ளத்தை உமது சிம்மாசனமாகக் கொள்ள வேண்டும்; உமது செல்வம் ஒன்றும் எனக்கு வேண்டாம்' என்றேன்.

25. எம்பெருமான் புன்னகை புரிவது இரண்டு தருணங்களில். முதலாவது, இரண்டு சகோதரர்கள் தமது தகப்பனார் விட்டுப்போன நிலத்தைக் கயிறு கொண்டு பிரித்து, 'இந்தப் பக்கத்திலுள்ளது என்னுடையது; அந்தப் பக்கத்திலுள்ளது உன்னுடையது' என்று சொல்லும்போது. இரண்டாவது, நோயாளி மரணத்தறுவாயி லிருக்கும்போது வைத்திய னொருவன், புலம்பும் நண்பர்களைப் பார்த்து 'பயப்படவேண்டாம், நோயாளியைக் குண மாக்குவது என் பொறுப்பு' என்று கூறும் போதாம். கடவுள் எவனுயிரைக் கொண்டு

போக நினைத்திருக்கின்றாரோ அவனை மானி டர் ஒருவராலும் காக்கமுடியாது என்பதை இந்த மூட வைத்தியன் அறியமாட்டான்.

26. ஒரு ஸமயம் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனைப் பார்த்து 'அஷ்டமா சித்தி களில் ஒன்றை நீ பெற்றிருந்தாலும் என்னு டைய பரமபாவனை (உன்னத நிலை)யை அறிய மாட்டாய்' என்றருளினார். ஆகையினால் உண்மைப் பத்தன் இந்த சித்திகள் ஒன்றை யும் இச்சிக்கலாகாது.

27. ஸாது சங்கத்தில் மிகவும் ஆவல் கொண்ட லக்ஷ்மீ நாராயணன் என்னும் **மார் வாரி** யொருவன், ஒருமுறை ஸ்ரீராமகிருஷ்ண ரைச் சந்தித்தான். இருவரும் வெகுநேரம் வேதாந்த விசாரணை செய்தார்கள். ஸ்ரீராம கிருஷ்ணருடைய திருவாய் மொழிகளைக் கேட்ட லக்ஷ்மீ நாராயணன், மிகவும் திருப்தி யடைந்து அவரை விட்டு நீங்குமுன், அவ ருடைய ஸேவைக்காகப் பத்தாயிரம் ரூபாய் கொடுப்பதாகக் கூறினான். இது ஸ்ரீராம கிருஷ்ணருக்கு மண்டையிலடித்ததுபோலிருந்

தது. மூர்ச்சை தெளிந்த பிறகு அவர் சிறு பிள்ளையைப்போல மார்வாரி கூறிய வார்த்தைகளால் தமக்குண்டான வெறுப்பைக் காட்டுங் குரலில், "அடே இந்த அறையை விட்டு உடனே வெளியே போ! செல்வத்தைக் காட்டி, என்னை மயக்கி இந்த மாயப் பிரபஞ்சத்திற்குள் இழுக்கப்பார்க்கிருயா?" என்ருர்.

ஸ்ரீராமகிருஷ்ணரைக் கொண்டாடி வந்த லக்ஷ்மீ நாராயணன் சற்று மனங் கலங்கிய போதிலும், ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்து "ஸ்வாமி! தாங்கள் இன்னமும் பரிபக்குவ நிலைக்கு வரவில்லை" என்ருன். "அஃதெப்படி உனக்குத் தெரியும்?" என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கேட்டார். அதற்குப் பதிலாக "பக்குவமடைந்த துறவி, தனக்குக் கொடுக்கப்பட்டவை எவையாயினும், அவற்றை அங்கீகரிப்பது அங்கீகரிப்பதில்லை என்பதைப்பற்றி யாதொரு வித்தியாசமும் வைப்பதில்லை; அவருக்கு ஏதாவது கொடுக்கப்படின் மகிழ்ச்சி யடைவதில்லை; அவரிடமிருந்து ஏதாவது எடுத்துப் போகப்படினும் வருத்த

மடைவதில்லை" என்று மார்வாரி சொன்னான். ஸ்ரீ ராமகிருஷ்ணர் புன்னகை செய்து கூறலானார்:—"ஒரு நிலைக் கண்ணாடியில் கொஞ்சமேனும் அழுக்கிருக்குமானால், உன் முகம் நன்றாய்ப் பிரதிபலிக்காது: அது போல், தூய மனத்தில், சிறிதேனும் பெண், பொன் எண்ணமிருத்தலாகாது." "போகட்டும், நான் கொடுக்கும் இத்தொகையை உமக்காக உமது மருமகன் **ஹ்ருதயன்** வைத்துக் கொள்ளலாமே!" என்றான் மார்வாரி. ஸ்ரீராமகிருஷ்ணர் இதற்குக் கூறியதாவது: "அதுவும் கூடாது. ஏனெனில் யாராவது ஒருவருக்கு ஏதோ கொடுக்கவேண்டும், அல்லது ஏதாவது ஒன்றிற்காகப் பணம்செலவழிக்கவேண்டும் என்று நான் ஹ்ருதயனைப் பணம் கேட்க, அவன் மறுத்தானானால், 'பணம் என்னுடையது தானே, எனக்காகத் தானே அவன் பணம் வைத்திருக்கிறான்,' என்னும் எண்ணம் இயற்கையாகவே தோன்றும்; இவ்வித அகங்காரம்இருத்தல் தகாது." இதைக் கேட்ட லக்ஷ்மீநாராயணன் ஆச்சரி

யப்பட்டு, ஸ்ரீராமகிருஷ்ணருடைய அதியற்புதமான பற்றற்ற தன்மையைக் கண்டு மகிழ்ந்து சென்றான்.

28. செல்வத்தைப் பற்றிப் பெருமை பேசுவது மூடத்தனமாகும். நீ பணக்காரனென்று சொன்னால், உன்னைவிட அதிகமாகச் செல்வம் படைத்தவர்கள் இருக்கிறார்களென்பதை அறியவேண்டும். அஸ்தமன வேளைகளில், மின்மினிப் பூச்சிகள் தோன்றி, தாம்தான் உலகத்திற்கு ஒளி கொடுப்பவைகளென நினைக்கின்றன; ஆனால் நக்ஷத்திரங்கள் உதித்த உடனே அவைகளினுடைய கருவம் பங்கமடைகிறது. பிறகு தாமே உலகத்திற்கு வெளிச்சம் கொடுப்பனவாக நக்ஷத்திரங்கள் நினைக்கின்றன. ஆனால் சந்திரன் உதயமானதும், அவை வெட்கமடைந்தவன்போல், மங்கியும் (இருப்பிடம் தெரியாதும்) போகின்றன. தனது கலைகளினால்தான் உலகம் புன்சிரிப்புச் செய்வதுபோல் தோன்றுகிறது என்று சந்திரன் நினைக்கிறான். ஆனால் சூரியன் தோன்றினவுடனே, சந்திரன்

ஒளி மழுங்கிச் சீக்கிரத்தில் கண்ணில் அகப் படாமல் மறைந்து போகிருன். தம்மைப் பணக்காரர்களென்று நினைப்பவர்கள் இவ் வியற்கைத் தோற்றங்களைப் பற்றிச் சிந்திப் பார்களானல், அவர்கள் தங்கள் செல்வத் தைப் பற்றிப் பிறகு எப்பொழுதும் பெருமை கொள்ளமாட்டார்கள்.

29. ஒரு ஸாது தன் குருவின் உபதேசப் படி ஜனங்கள் வசிக்குமிடத்திற்குக் கொஞ்ச தூரத்திலே, ஒரு சிறு ஓலைக் குடிசை கட்டி அங்கு சாதனங்களை அப்பியசித்து வந்தார். அவர், நாள்தோறும் காலையில் நீராடி தமது வஸ்திரத்தையும் கௌபீனத்தையும், உலரும் படிக் குடிசைக்கருகேயுள்ள மரத்தில் போடு வார். ஆனல் அவர் தமது பிக்ஷைக்காக அருகிலுள்ள கிராமத்திற்குப் போய் திரும்பி வந்தபோது, தமது கௌபீனத்தை எலிகள் கடித்திருப்பதைக் காண்பார். அதனல் புதிய கோவணத்திற்காக அவர் கிராமத்திற்குப் போகும்படி நேரிடும். சில நாள் கழித்து, இந்த ஸாது, கோவணத்தைத் தம் வீட்டுக்

கூரையின்மேல் உலர்த்திவிட்டு, வழக்கம் போலப் பிக்ஷைக்காகக் கிராமத்திற்குச் சென்றார். திரும்பி வந்து பார்த்தபொழுது கோவணம் துண்டுகளாகக் கிழிக்கப்பட்டிருந்தது. 'ஒரு கந்தைக் கோவணத்திற்காக நான் எங்கு போவது? யாரைக் கேட்பது?' என்று யோசித்தார். கடைசியாக அவர் அடுத்த நாள் கிராமத்திலுள்ளவர்களைக் கண்டு எலிகளினால் தாம் படும் கஷ்டத்தை எடுத்துரைத்தார். அவர் கூறியதை எல்லாம் கேட்ட கிராமவாசிகள் 'தங்களுக்குத் தினந்தோறும் யார் வஸ்திரங் கொடுத்து வருவார்கள்? ஒன்று செய்யும்; பூனையொன்றை வளர்த்து வாரும். அது எலிகள் வராமற் காக்கும் என்றார்கள். அந்த ஸாதுவும் அப்படியே கிராமத்திலிருந்து ஒரு பூனைக்குட்டியை எடுத்துக்கொண்டு தம்முடைய குடிசைக்கு வந்து சேர்ந்தார். அது முதற் கொண்டு எலிகள் அத்துறவியைத் தொந்தரவு செய்யா தொழிந்தன. அதனால் அவருக்குண்டான ஆனந்தம் கொஞ்சமன்று.

அவர் பூனைக்குட்டியை வெகு அன்பாய் வளர்த்து கிராமத்தாரிடம் பால் பிச்சை யெடுத்து அதற்கு உணவளித்து வந்தார். சில நாட் கழித்து, ஒரு கிராமவாசி, ஸாதுவைப் பார்த்து, 'ஸ்வாமி! உமக்கோ தினந்தோறும் பால் தேவை; பிச்சை யெடுப்பதனுல் உங்களுக்குக் கொஞ்ச நாட்களுக்குத்தான் பால் அகப்படும்; வருஷ முழுவதும் உங்களுக்கு யார் பால் கொடுப்பார்கள்? ஒன்று செய்யலாமே—பசு ஒன்று வைத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய சரீர போஷணைக்காக அதன் பாலைப் பயன்படுத்திக் கொள்ளலாம்; பூனைக்கும் கொஞ்சம் கொஞ்சம் கொடுக்கலாம்' என்முன். சில நாட்களில், துறவி பசு ஒன்றைப் பெற்றுக் கொண்டார். பாலுக்காக பிறரிடம் இரக்க வேண்டிய அவசியமுமில்லாமற் போய்விட்டது. சீக்கிரத்தில், பசுவிற்காக வைக்கோல் இரக்கவேண்டுமென்பதை ஸாது அறிந்தார். இதற்காக அவர் அக்கம் பக்கத்திலுள்ள கிராமங்களுக்குச் செல்லும்படியாயிற்று. ஆனுல் கிராமவாசிகளோ, "தங்க

ளுடைய குடிசைக் கருகில் விசாலமான புறம் போக்கு நிலமிருக்கின்றது; அதனைப் பயிரிட்டால் உமது பசுவிற்கு வைக்கோல் வேண்டுமென்று நீர் பிச்சை எடுக்கவேண்டாமே!" என்றார்கள். அவர்கள்சொன்னபடியே, துறவி நிலத்தைப் பயிரிட ஆரம்பித்தார். கொஞ்ச நாளைக்கெல்லாம் வேலையாட்கள் சிலரைக் கூலிக்கமர்த்தவும், அறுவடையான தானியம் முதலியவற்றைச் சேர்த்து வைக்கக் களஞ்சியம் கட்டவும் வேண்டும் என்று அவரறிந்தார். இப்போது அவர் ஒரு சம்ஸாரியைப் போலக் காலம் கழிக்கலானார். சில காலம் கழித்து, இந்த ஸாதுவினுடைய குரு இவரைக் காணவந்தார். எங்கும் சாமான்கள் நிறைந்திருப்பதைக் கண்ட அவர், ஒரு வேலைக்காரனைப் பார்த்து "இங்கு குடிசையொன்றில் துறவியொருவர் வசித்து வந்தாரே, அவர் எங்கே போய்விட்டார் தெரியுமா?" என்று கேட்டார். வேலைக்காரனுக்கு என்ன மறுமொழி கூறுவதென்று விளங்கவில்லை. அதனால் குருதைரியமாக வீட்டிற்குள் நுழைய, அங்கே

தம்முடைய சிஷ்யனைக் கண்டார். கண்டதும், "அப்பா! இவைகளெல்லாம் என்ன?" என்று வினவினார். சிஷ்யர் வெட்கமடைந்து தம் குருவின் கால்களில் விழுந்து "ஸ்வாமி! எல்லாம் ஒரு கந்தைக்காக" என்று கூறி நடந்தவற்றை யெல்லாம் விவரமாக எடுத்துரைத்தார். தம் குருவைக் கண்ட மாத்திரத்திலே ஸாதுவினுடைய உலகப் பற்றெல்லாம் மறைந்து போயின. பிறகு அவர் தம் சொத்துக்கள் எல்லாவற்றையும் துறந்து விட்டுத் தம் குருவைப் பின் தொடர்ந்து சென்றார்.

---

# ஸாதனனுகூலங்கள்
## (கடவுளைப்பற்றித் தியானம் செய்வதற்கு உதவுபவைகள்)

1. (ஸாதனைகள் செய்யும்போது) ஆரம்பத்திலே, தனித்த ஓரிடத்தில் மனத்தை ஒரு வழிப்படுத்த முயலவேண்டும். இல்லாவிடில் பல விஷயங்களினால் மனம் அலைச்சற்படும். பாலையும் நீரையும் ஒன்றாகச் சேர்த்து வைத்தால் இரண்டும் ஒன்றாகக் கலந்துவிடும். ஆனால் பாலை வெண்ணையாக மாற்றிவிட்டால் வெண்ணெய் நீரோடு சேராமல் மேலே மிதக்கும். அதுபோல் ஒருவன் வெகுகாலப் பழக்கத்தினால் மனத்தை அடக்கினபோது தான் அவன் தனிமையான இடத்திலிருந்தாலும் இல்லாவிட்டாலும் எப்போதும் கடவுளைப்பற்றித் தியானிக்க முடியும்.

2. நிஷ்டை இல்லாமல் கடவுளை நேரிற் காணமுடியாது. தன் புருஷனிடம் பூரண அன்புகொண்டிருப்பவள் **ஸதி** யென்று அழைக்கப்பட்டுத் தன் கணவனுடைய முழு

அன்பையும் பெற்றிருப்பதுபோல, தன் னிஷ்ட தேவதையினிடம் பூரணபக்தியுடைய வன், பகவானுடைய கருணையைப்பெற்று அவரை நேரிற் காண்கிருன்.

3. "சுக்கில பக்ஷத்தில் இன்றைக்கு என்ன திதி?" என்று ஒருவர் அனுமானைக் கேட்ட பொழுது, அவர், "இன்ன நாளென்ருவது, இன்றைய தினம் சந்திரனுக்கு இன்ன கலை யென்ருவது, நக்ஷத்திரங்களின் நிலை ஈதென் ருவது எனக்கொன்றும் தெரியாது. ஸ்ரீராம சந்திருடைய பாதபத்மங்களை மாத்திரமே நான் அறிவேன்" என்ருர்.

4. மனம், வனம், தனிமையானஇடம்—இம் மூன்றும் தியானத்திற்கேற்ற இடங்களாம்.

5. ஒய்வுபெருமலும், சிறிது வேலையுமின் றித் தனித்துப் படுக்காமலும் கடுமையான பிணியை நீ எப்படி நீக்குவாய்? ஒருவன் கடுஞ் சுரத்தினுல் வருந்திக்கொண்டிருந்தானும்; அவன் இருக்கும் அறையிலே ஒரு கூஜா நிறைய நீரும், ருசியான ஊறுகாய்களும் வைத்தார்களாம்! (தகாது என்றபடி)

பெண்ணாசை ஊறுகாய் போன்றது. உலக சுகங்களை அனுபவிக்க வேண்டுமென்னும் அவா, நீர் நிறைந்த ஒரு கூஜாவைப் போன்றது. இப்படிப்பட்ட சாமான்களிருந்தால் நோயை நீக்க எவ்வாறு இயலும்? நீக்க விரும்பினால் ஏகாந்தமான இடத்திற்குச் சென்று ஸாதனைகள் செய்யவேண்டும். இந்த மருந்தின் உதவியின் மூலம் முற்றிலும் குணமான பிறகு ஒருவன் வீட்டிற்குத் திரும்பி வருவானானால் யாதொரு பயமுமில்லை.

6. ஆத்மிக வாழ்க்கையின் ஆரம்பத்தில், பகவானைத் தியானிப்பதற்காகத் தனித்த ஓரிடஞ் சென்று மனத்தை அடக்க முயல வேண்டும்; இடைவிடாப் பழக்கத்தினால் மனம் வசமாக்கப்பட்ட பிறகு இஷ்டமான இடத்தில் தியானஞ் செய்யலாம். ஓர் இளஞ் செடியை வேலி போட்டு ஜாக்கிரதையாகக் காப்பாற்ற வேண்டியிருக்கின்றது. இல்லா விட்டால் ஆடுகளும் பசுக்களும் அந்தச் செடியை மேய்ந்து தின்றுவிடும். ஆனால் அச் செடி பருத்த மரமாக வளர்ந்த பிறகு பசுக்க

ளாவது ஆடுகளாவது அதை அழிக்க முடியாது.

7. யௌவன பருவமுள்ள சிஷ்யனொருவன், ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்து "ஸ்வாமி! காமத்தை எவ்வாறு வெல்லலாம்?" என்று கேட்டான். ஸ்ரீராமகிருஷ்ணர், புன்னகை புரிந்து, "ஸ்திரீகளெல்லோரையும் உன் தாயாகவே கருது; எப்போதும் ஸ்திரீகளின் முகத்தைப் பாராதே; அவர்கள் பாதங்களையே நோக்கு; அப்போது எல்லாத் தீய எண்ணங்களும் மாறிவிடும்" என்றார்.

8. க்ஷமை (பிறர் குற்றங்களைப் பொறுத்தல்) ஒவ்வொருவனுக்கும் இருக்கவேண்டிய மிகவும் முக்கியமான குணமாகும். இந்தக் குணமிருப்பவன் மாத்திரமே என்றும் அழிவடையான். வங்காளி எழுத்துக்களில் ஸ என்ற எழுத்தைத் தவிர வேறெந்த எழுத்தும் மூன்று உருவங்களுடையதன்று. ச, ஷ, ஸ ஆகிய மூன்றும் மன்னித்தல், பொறுத்தல் என்னும் பொருளுடையனவாம்.

9. மன்னித்தல் (க்ஷமை)—இதனை ஒவ்வொருவரும் அபிவிருத்தி செய்யவேண்டும். அதனைவிட உயர்ந்ததொரு குணமில்லை. ஒரு கருமானுடைய பட்டறையானது அவனது கனமான சம்மட்டியினால் கொடுக்கப்படும் எண்ணிறந்த அடிகளைப் பொறுத்திருக்கின்றது. அதுபோல ஒவ்வொருவரும் பிறர் சொல்வதையும், செய்வதையும் பொறுத்திருக்கவேண்டும்.

10. சுவையுள்ள உணவு குளத்திற் போடப்படுமானால் எல்லாப் பக்கங்களிலிருந்தும் மீன்கள் வந்து அதனைச் சூழ்ந்து கொள்கின்றன. பக்தனுடைய நம்பிக்கையும் கடவுள் விஷயத்தில் அவ்வாறே. பகவான் பக்தனுடைய பக்தியினால் இழுக்கப்பட்டு, அவனிடம் வந்து காட்சிகொடுக்கிறார்.

11. மழைக்காலத்தில் தோன்றும் ஈசலானது விளக்கு ஒளியினருகே ஓடுகின்றது. அது இருட்டிற்குத் திரும்பிப் போவதைவிட விளக்கின் ஒளியில் இறக்கத் தயாரா யிருக்கின்றது. அதுபோல, எங்கு சாதுக்கள்

வசித்துப் பகவானைப் பற்றிப் பேசுகிறார்களோ அவ்விடத்தை நாடிப் பக்தன் செல்கின்றான் ; உலகத்திலுள்ள பயனற்ற விஷயங்களில் ஈடுபடாமலிருந்து, தன் நேரத்தையெல்லாம் பகவத் ஸாதனை புரிவதில் செலவழிக்கிறான்.

12. ஒரு சமயம் சிவபெருமானை நோக்கிப் பார்வதிதேவி, 'எம்பெருமானே ! கடவுளைப் பற்றின ஞானத்தின் சூக்ஷமம் என்ன?' என்று வினவினார். அதற்கு மஹாதேவர், '**நம்பிக்கை** ஒன்றேதான் சூக்ஷமம்' என்றார். உன் குருவினிடத்தில் உனக்குத் திடமான முழு நம்பிக்கை இருந்தாலொழியக் கடவுளை அறிய முடியாது.

13. பெறுதற்கரிய பெரும்பேறாகிய மானிட ஜன்மம் எடுத்தும் ஒருவன் கடவுளை இச் ஜன்மத்திலேயே காணானாயின் அவன் பிறப்பெடுத்தது வீணேயாகும்.

14. உலக வாழ்க்கையி லமிழ்ந்திருக்கும் மனிதன் *'வில்' வைத்த மெத்தையைப்

* (வில்=Spring)

போன்றவன். நீ அதன்மேல் உட்கார்ந் திருக்கும் வரையில் அந்த வில்லை அழுத்தி வைத்திருக்கலாம்; அதைவிட்டு எழுந்தால் மெத்தை உயர்ந்து தன் பழைய உருவம் கொண்டுவிடும். அதுபோல, லௌகிகன் ஒருவன் கொண்டுள்ள நல்லெண்ணங்களெல் லாம் ஸாதுக்கள் சங்கத்தில் தோன்றும். அவர்களைவிட்டு நீங்கின உடனே அவ்வெண் ணங்கள் மறைந்துபோம்; அவன் மனம் முன் போலவே மாசு நிறைந்திருக்கும்.

15. பகவந் நாமத்தின் சக்தியில் முழுது நம் பிக்கையும் அதனை மனனம் செய்ய ஆவலும் ஒருவருக்குத் தோன்றுமானால், அவனுக்கு ஞானமும் எந்த ஸாதனங்களும் அவசிய மானவைகளல்ல; சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்துவிடுகின்றன: மனம் சுத்தமாகிவிடு கின்றது. பகவந் நாமத்தின் சக்தியினாலேயே அவன் அவரைத் தரிசிக்கிறான்.

16. குழந்தைக்கிருக்கும் நம்பிக்கையும் குற்றமற்ற தன்மையுமிருந்தால் கடவுளை யடை

யலாம். ஸாது ஒருவரை ஒருவன் கண்டு அவரை வினயத்துடன் வணங்கி உபதேசம் செய்யும்படிக் கேட்டுக்கொண்டான். 'உன் முழு மனத்தோடு கடவுளிடம் பக்தி கொண்டிரு' என்று அவர் உபதேசித்தார். அதற்கு அவன் 'நான் கடவுளைக் கண்டதில்லை: அவரைப்பற்றி ஒன்றும் அறியேன்; அவரிடம் நான் எப்படி பக்தி கொள்ளக்கூடும்!' என்று பதில் கூறினன். 'உனக்கு எதனிடம் மிகுந்த அன்பு உண்டு' என்று ஸாது கேட்டார். 'நான் நேசிக்கக்கூடியவர்கள் ஒருவருமில்லை. என்னிடம் ஓர் ஆடு இருக்கின்றது. அதனிடம் எனக்கு மிகுந்த பிரியம்' என்று அவன் சொன்னன். அதைக்கேட்ட சாது, "அப்படியானல் அதைக் கருத்துடன் வளர்த்துவா; அதனை உன் முழுமனதுடன் நேசி; அதிலே பகவான் வசிக்கிறார் என்பதை எப்போதும் நினைத்துக்கொள்" என்று கூறிவிட்டு அவ்விடத்தைவிட்டுச் சென்றார். அந்த மனிதன் ஆட்டை வெகு ஜாக்கிரதையுடன் வளர்த்து வந்ததோடு பகவான் அதனுள்

உறைகின்றார் என்றும் நம்பி வந்தான். வெகு காலங்கழித்து ஸாது அவ்வழியே திரும்பி வந்தபோது அம் மனிதனை தேடிப் பார்த்து, "அப்பா எப்படி இருக்கிறாய்?" என்று விசாரித்தார். அவன் ஸாதுவை வணங்கி, "ஸ்வாமி! தாங்கள் உபதேசத்தினால் நான் சுகமாகவே யிருக்கிறேன். தாங்கள் உபதேசித்தபடி நடந்ததினால் எனக்கு மிகவும் நன்மை உண்டாயிருக்கின்றது. நான்கு திருக்கரங்களையுடைய ஓர் அழகிய உருவத்தை என் ஆட்டினிடம் பல முறை காண்கிறேன்; அதனால் பரமானந்த மடைகிறேன்" என்றான்.

17. ஸாதுக்களின் சங்கம் (பெரியோருடன் கூடியிருத்தல்) அரிசியைக் கழுவின நீரைப் போன்றது. கட்குடியினாலேற்படும் மயக்கமானது கழுவிய இந்த நீரைக் குடிப்பதனால் நீங்குவதுபோல, ஆசை யென்னும் கட்குடியாலுண்டான மயக்கத்தை நீக்குவதற்கு ஸாதுக்களின் சங்கமே தகுந்த மருந்தாகும்.

18. ஸ்ரீராமகிருஷ்ணர் ஸாதுக்களை, பாம்புகளுக்கு ஒப்பிடுவர். எப்படிப் பாம்பு தனக்கென்று வளை தேடிக்கொள்ளாமல் எலிசெய்த வளைகளில் வசிக்கின்றதோ, அதுபோல ஸாதுவும் தனக்கென்று வீடு கட்டிக்கொள்ளாமல், அவசியமானால் பிறருடைய வீடுகளில் வசிக்கிறார்.

19. ஒருவன் நியாயவாதியைக் (வக்கீலைக்) காணும்போதெல்லாம் பிராதுக்களைப் பற்றியும், நியாய ஸ்தலங்களைப் பற்றியும், நினைப்பது போலவும், வைத்தியரைக் காணும்போதெல்லாம் நோய்களையும் மருந்துகளையும் பற்றி நினைப்பது போலவும், ஸாது ஒருவரைக் காணும்போதெல்லாம் கடவுளைப் பற்றியும் மோக்ஷத்தைப் பற்றியும் நினைக்கிறான்.

---

## சாதனை புரிவதில் விடாமுயற்சி

1. முத்துக் குளிப்பவர் கடலில் **ஒருமுறை** மூழ்கி முத்து கொண்டுவராவிடில் கடலில் முத்துக்களே இல்லையென்று நீ முடிவு செய்யாதே. கடலில் புதைந்து கிடக்கும் முத்துக்கள் எண்ணிறந்தவை. ஆகையால், பக்திக்குரிய சில ஸாதனைகளைச் செய்தானதும் கடவுளைக் காணுவிடில் நீ அதைரியப்படாதே; பொறுமையாக பகவானுடைய ஸாதனைகளைச் செய்துகொண்டுவா; தகுந்த காலத்தில் உனக்குக் கடவுட் கிருபை கிடைக்குமென்பது நிச்சயம்.

2. (சுவாதி நக்ஷத்திரத்தில் பெய்யும் மழையில் ஒரு துளியேனும் ஒருவகை நத்தையின் ஓட்டிற்குள் விழுமானால் அந்த ஓடு உடனே மூடிக்கொள்ளுமென்றும், பிறகு அந்நீர்த் துளி முத்தாக மாறிவிடுமென்றும் சொல்லுகிறார்கள்.) அந்த 'சுவாதி' மழைத் துளிக்காக, தன் ஓடுகளை திறந்துவைத்துக்கொண்டே ஜலத்தில் மிதந்து செல்லும் ஒருவிதக் கடல் நத்தை

யுண்டு. அந்நீர்த்துளி விழுந்த பிறகு, அந்த நத்தை கடலுக்குள் மூழ்கிவிடுகிறது. பிறகு வெளிக்கிளம்புவதில்லை. அதுபோல ஊக்கமுள்ள நிஜ பக்தன் தன் குருவினிடமிருந்து அருமையான மந்திரத்தைப் பெற்று, உலக விஷயங்கள் ஒன்றின் மீதும் மனம்செலுத்தாமல், அளவிடற்கரிய ஆழமான பக்தியென்னும் கடலுக்குள் முழுகுகிறான்.

3. பணக்காரனொருவனைக் காணவேண்டுமாயின் வாசலிலுள்ள வேலையாட்களின் தயவைப் பெறவேண்டும்; அதுபோல, கடவுளை அடைய ஸத்ஸங்கத்தையும் அதைப் போன்ற மற்ற உதவிகளையும் நாடி, பலவிதமான ஸாதனங்கள் புரியவேண்டும்.

4. காட்டிலிருந்து கொணர்ந்த விறகை விற்று, ஒரு விறகுவெட்டி கஷ்ட ஜீவனம் செய்துகொண்டிருந்தான். ஒருநாள் அவன் விறகுச் சுமை யொன்றைக் கொண்டுவரும்போது, ஒரு புது மனிதன் அவனைக் கண்டு, மேலும் மேலும் காட்டிற்குள் போகும்படி கூறினான். புது மனிதன் சொன்னபடியே,

விறகுவெட்டி மறுநாள் காட்டினுள் செல்ல, அதற்குத் தகுந்த பலனை அடைந்தான். ஏனெனில் காட்டின் அப்பாகத்திலே பெரிய மரங்கள் இருப்பதைக் கண்டான். அவன் தன்னுலியன்ற மட்டும் விறகை வெட்டி, அது வரைக்கும் கிடைத்த பணத்தைவிட அதிக மாக அன்று அடைந்தான். அடுத்தநாள் அவன் பின்வருமாறு யோசிக்கலானுன்:— "காட்டினுள்ளே செல்லும்படியாக எனக் குப் போதித்திருக்கிறுர்கள்; ஆகையினுல் இன்று ஏன் நான் இன்னும் அதிகம் போகக் கூடாது? அவனெண்ணப்படியே செய்து சந்தன மரங்கள் அடர்ந்திருந்த இடத்தை யடைந்தான். தன்னுல் சுமக்கக் கூடிய சந் தனக் கட்டைகளைத் தூக்கிச் சென்று விற்று மிகுதியான இலாபத்தைப் பெற்றுன். தனக் குப் புதியவன் சொல்லிய புத்திமதியை மறு நாளும் அவன் மனத்தில் வைத்து, முன்னி லும் அதிகமாகக் காட்டினுள் செல்லத் தீர் மானித்தான். இப்படி நாள்தோறும் செய்து வர, அவன் வெள்ளிச் சுரங்கங்கள், தங்கச்

சுரங்கங்கள், இரத்தினச் சுரங்கங்கள் இவை களை அடைந்து மிகுந்த செல்வமுடையவனு னுன். ஆத்மஞான வழியைப் பின்பற்றுகிற வர்களுடைய நிலைமையும் இவ்வாறே. மேன் மேலும் முயற்சி செய்துகொண்டிருக்க வேண்டுமேயல்லாது பரஞ்சோதியான ஸ்வ ரூபத்தைச் சில முறை கண்டதனுலாவது, சில சித்திகளை யடைந்ததனுலாவது எல்லாவற் றையும் பெற்றுவிட்டதாக நினைக்கக்கூடாது.

5. ஒரு பெரிய குளத்தில் மீன்கள் நிறைய இருக்கின்றனவென்று ஒருவன் அறிவா னுனல் அவன் என்ன செய்யவேண்டும்? அக் குளத்தில் மீன் பிடித்தவர்களைக் கண்டு, தான் செவியுற்ற சமாசாரம் உண்மையா இல்லையா என்றும், உண்மையாயின், எது தகுந்த தூண் டில் என்றும் விசாரிப்பதிலேயே தன் நேரத் தைக் கழிப்பானுகில், அவன் மீன் பிடிக்க ஆரம்பிக்கவேமாட்டான். அவன் என்ன செய்யவேண்டுமெனில், குளத்திற்குப் போய், தூண்டிலை நீருக்குள் போட்டு, பொறுமையா கக் காத்திருக்க வேண்டியதுதான். சீக்கிரத்

திலே மீன்கள் தூண்டிலிலுள்ள இரையைக் கௌவுவதைக் காண்பான். காலக்கிரமத்திலே பெரிய மீனென்றை அவன் பிடிப்பான். இப்படித்தான் ஆத்மீக விஷயங்களிலும், மஹான்களும் பக்தர்களும் திருவாய் மலர்ந்தருளியதில் முழு நம்பிக்கை வைத்து பக்தி யென்னும் தூண்டிலைப்போட்டு, பொறுமை யென்னும் கயிற்றையும் கொம்பையும் பிடித்துக் காத்திருக்கவேண்டும்.

6. ஒருவன் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்த்து "ஸ்வாமி! நான் பல ஸாதனைகளைப் புரிந்திருக்கிறேன்; ஆனல் நான் முன்போலவே அஞ்ஞானம் நிறைந்தவனு யிருக்கிறேன். என்னைப் போன்றவர்களுக்கு இந்த ஸாதனைகளால் யாதொரு பயனுமில்லை" என்றான். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவனைப் பார்த்துப் புன்முறுவல் புரிந்து, 'இதைக் கவனி; வருஷந் தப்பாமல் பன்னிரண்டு வருஷங்களுக்கு மழையில்லாவிட்டாலும் பல தலைமுறைகளாக உழவுத் தொழிலைச் செய்து வந்தவர்களின் குலத்திற் பிறந்தவன் தன் தொழிலாகிய நிலத்தைப்

பண்படுத்துதலை விட்டுவிடுவதில்லை; ஆனால் உழவர் வம்சத்திற் பிறவாது, அதிக லாபம் கருதிப் பயிரிடுபவர்கள், ஒரு வருஷம் மழை யில்லாவிட்டால் அதைரிய மடைகிறார்கள். தன் ஆயுள் முழுவதும் பக்தி செய்து கடவுளைக் காணாவிட்டாலுங்கூட, உண்மைப் பக்தனானவன் எம்பெருமான் திருநாமங்களையும் அவருடைய மகிமைகளையும் கூறாமலிருப்பதில்லை' என்றார்.

7. நீந்தக் கற்றுக்கொள்வதற்கு முன், நீரில் எவ்வளவோ தடவை முழுகி எழுந்திருக்க வேண்டும். அதுபோல ஸச்சிதானந்த ஸாகரத்தில் நீந்துவதற்கு முன், நீ எவ்வளவோ திண்டாடவேண்டும்.

---

## கடவுளைக் காண வேட்கை

1. கடவுளிடம் ஒருவர் எவ்வாறு அன்பு கொள்ளவேண்டும்? உலக வாழ்க்கையிலமிழ்ந்திருப்பவனுக்கு உலகப்பொருள்களின் மீதுள்ள பற்று, லோபிக்குத் தன் செல்வத்தின் மீதுள்ள பேராசை, பதிவிரதையான ஒரு பெண்மணிக்குத் தன் கணவன்மீதுள்ள அன்பு, இம் மூன்றும் சேர்ந்தால் எவ்வளவு அன்பிருக்குமோ, அவ்வளவிருக்குமானால் ஒருவன் கடவுளைக் காண்பது நிச்சயம்.

2. ஒரு தாய்க்குப் பல குழந்தைகள் இருக்கின்றன; ஒரு குழந்தைக்கு விளையாட்டுச் சாமானொன்று கொடுக்கிறாள்; மற்றொன்றிற்குப் பதுமையொன்றும், மூன்றாவதற்குத் தித்திப்பான தின்பண்டங்களும் தர, அவை, அவைகளிலேயே மனஞ்செலுத்தித் தம் தாயை மறந்துவிடுகின்றன. ஆனால் அவைகளுள், தன் விளையாட்டுச் சாமான்களை வீசியெறிந்துவிட்டு, 'அம்மா எங்கே?' என்று அழும் குழந்தையே அன்னையைத் தன்னிடம் வரச்செய்கிறது. அவள் அதனிடம் ஓடி வந்து, தன் கைகளால் வாரியெடுத்து அழாம

விருக்கச் செய்கிறாள். ஓ மனிதனே! அதைப் போலவே, நீ, பெண்ணாசை, பொன்னாசை களில் ஆழ்ந்திருக்கின்றாய்; எப்பொழுது அவைகளை நீ துறந்துவிட்டு ஜகன்மாதாவிற் காக ஏங்கி அழுகிறாயோ, அப்போது அவள் வந்து உன்னைத் தன் திருக்கரங்களில் எடுத் துக்கொள்வாள்.

3. தங்களுக்கொரு பிள்ளை பிறக்காவிட் டாலோ அல்லது அதிக செல்வம் கிடைக்கா விட்டாலோ பெரும்பாலான மனிதர்கள் ஆறாய்க் கண்ணீர் கொட்டுகிறார்கள். ஆனால் கடவுளைத் தரிசிக்கும்படியான பாக்கியம் பெறவில்லை யென்றாவது, அவரிடம் போது மான பக்தி கொள்ளவில்லை யென்றாவது ஒரு துளி கண்ணீர் விடுபவர் எவருமில்லை.

4. ஏசு (கிறிஸ்து) பெருமான் கடலோர மாக ஒரு நாள் உலாவிக்கொண்டிருந்த பொழுது, பக்தன் ஒருவன் அவரை அணுகி, 'சுவாமி கடவுளை எப்படி அடையலாம்?' என்று கேட்டான். உடனே, பெருமான் அவனுடன் கடலுக்குள் இறங்கி அவனை

நீருக்குள் அமிழ்த்தினர். கொஞ்ச நேரத்துக் கெல்லாம் அவர் அவனை மேலே தூக்கி 'எப் படியிருந்தது?' என்று வினவினர். பக்தன் உயிர் போகும் தருணம் வந்துவிட்டது என்று நான் எண்ணினேன். என் நிலைமை திண்டாட்டமாயிருந்தது' என்றான். இதைக் கேட்ட பெருமான் 'சற்று முன், ஒரு மூச்சு வாங்குவதற்கு எவ்வளவு ஆவல் கொண்டிருந் தாயோ, அவ்வளவு தீவிரமாகக் கடவுளைப் பார்ப்பதற்கு ஆவல் இருக்குமானால், நீ அவரைக் காண்பாய், என்றருளினர்.

5. குழந்தையானது தனக்குக் காசு கொடுக்கும்படி தாயைத் தொந்தரவு செய் தும், அழுதும் அடித்தும்கூட வேண்டுகிறது. இந்தக் குழந்தையைப் போல எந்த மனிதன் ஜகன்மாதாவே தன் அன்னையென்று உறுதி யான நம்பிக்கையுடன் அழுகிறானோ அவனே பலனடைகிறான். உலக மாதா அவனிட மிருந்து அதன்பின் மறைந்திருக்க முடியாது.

6. ஜகன்மாதாவைக் காணவேண்டு மென்று தமக்கிருந்த ஆர்வத்தைப் பற்றி

ஸ்ரீ ராமகிருஷ்ணர் பின்வருமாறு கூறுவார்: தக்ஷிணேசுவரத்திலுள்ள லோகமாதாவின் திருக்கோயிலில், மாலையிற் பூஜை நடக்கும்; அப்போது அடிக்கப்படும் தாளங்கள், மணிகள் முதலியவைகளின் சத்தத்தைக் கேட்கும்போது, நான் கங்காநதியின் கரைக்கு ஓடிப் போய், "தாயே! தாயே!! இன்னுமொரு நாள் கழிந்துவிட்டது; ஆனால் தாங்களோ தங்கள் புதல்வனுக்குக் காட்சி கொடுத்தருளவில்லை" என்று ஓலமிடுவேன்.

7. ஒருவனுக்குத் தாகமிருந்தால், அவன் கங்கையின் நீர் கலங்கலாக இருக்கிறதென்று அதனைக் குடிக்கமாட்டேனென்கிறானோ? குடிக்க ஜலம் வேண்டுமென்று ஒரு குளம் வெட்ட ஆரம்பிக்கிறானோ? மதத்தைப்பற்றி வேட்கையில்லாதவன், எல்லா மதங்களையும் எதிர்த்துக் கொண்டும், அவைகளைப்பற்றி எல்லையில்லாத விவாதங்களைக் கிளப்பிக் கொண்டும் இருக்கிறான். வேட்கையுள்ளவனுக்கு நுட்பமாக ஆராய்ச்சி செய்ய நேரமில்லை.

---

# பகவத் ப்ரேமையும் பாவனையும்

1. இலக்ஷக்கணக்கான ரூபாய் பெறுமான ஹீரே மதி (ரத்னம்-முத்து), கடைகளிலும் விலைக்கு வாங்கலாம்; ஆனால் கிருஷ்ணமதி * (கிருஷ்ணனிடம் பக்தி) யுடையவர் வெகு சிலரே யன்றோ?

2. ஒரு சாதாரணக் கண்ணாடி எந்த உருவத்தின் பிரதிமையையும் பதிந்துகொள்ளாது; ஆனால் தகுந்த மருந்து பூசப்பட்ட புகைப்படம் எடுக்கும் கண்ணாடியோ உருவத்தைப் பதிந்துகொள்ளும். அதுபோல, பகவத் பிரேமை என்பதனால் பூசப்பட்ட நிர்மலமான இருதயத்தில் எல்லாம் வல்ல இறைவனுடைய விக்கிரகமானது பிரதிபிம்பிக்கிறது. கடவுட் பக்தி யில்லாவிடில் நிர்மலமான மனத்தில் பிரதிபிம்பமொன்றுந் தோன்றாது.

3. **பிரேமை** என்பது என்ன? பரந்தாமனுடைய திவ்ய நாமத்தை உச்சரிக்கும்போது,

---

* வங்காள பாஷையில் **மதி** என்பதற்கு முத்து, பக்தி என இரு பொருள்களுண்டு. ஆகையால் அதைச் சிலேடையாக உபயோகிக்கிறார்.

ஒருவன் வெளி உலகத்தையும் தனக்குப்பிரிய மான சொந்த உடலையும் மறந்து விடுதலாம்.

4. முதலில் பாவனை, பிறகு பிரேமை, கடைசியாக பாவ ஸமாதி. ஜனங்கள் சேர்ந்து பஜனை செய்யும்போது அவர்கள் "நிதாய் அமார் மதாஹாதி"....(என் நிதாய் ஒரு மதம் பிடித்த யானை) என்னும் முழு வாக்கியத்தை யும் சொல்லுகிறார்கள். கொஞ்ச நேரத்திற் கெல்லாம் யாருக்காவது பாவனையுண்டானால் (பக்திமிகுந்தால்) அவன் **ஹாதி** என்றொரு வார்த்தையைத்தான் உச்சரிக்க முடியும்; பிரேமை மிகுந்தபோது அவ் வார்த்தை முழு வதையும் உச்சரிக்கக்கூட அசக்தனாகிறான். கடைசியாக, பாவ ஸமாதியிலே முதல் சொல் லான **ஹா** என்பதை மாத்திரந்தான் உச்ச ரிக்க முடியும். இவ் வழியே, படிப்படியாக அவன் பேச்சடங்கி, வெளி உலக சம்பவங்களை யறிவதிலிருந்து நீங்குகிறான்.

5. ஒரு குடிசைக்குள் நுழையும் யானையா னது, குடிசையை ஆட்டிவிட்டுக் கடைசியாக அதனைக் கீழே வீழ்த்துவதுபோல கடவுளிட

மிருக்கும் அத்யந்த பக்தியானது, இந்த உடலென்னும் அற்பவீட்டைத் தள்ளிவிடுகின்றது.

6. உண்மைப் பக்தன் சொல்வதாவது:— "பிரபோ! அடியேன் யந்திரம்! நீர் யந்திரத்தைச் செலுத்துகிறவர்; அடியேன் ஓர் அறை; நீர் அதில் வசிப்பவர்; அடியேன் ரதம், நீர் அதனைச் செலுத்துபவர்; தாங்கள் என்னைப் பேசச் செய்கிறபடியே நான் பேசுகிறேன்; தாங்கள் நடத்துகிறபடியே நான் நடக்கிறேன்; தாங்கள் எப்படிச் செய்விக்கிறீர்களோ அப்படிச் செய்கிறேன்."

7. பக்தியானது தானுகவே ஒருவன் செய்ய வேண்டிய லௌகிக கருமங்களைக் குறைத்துவிடுகிறது. கடவுளிடம் பக்தி கொள்கிறவன் அதே சமயத்தில் லௌகிக கருமங்களைச் செய்தல் இயலாது. கற்கண்டைக் கரைத்துச் செய்த பானகத்தை அருந்தினவன் வெல்லப் பானகத்தை விரும்பமாட்டான்.

8. ஸந்தியாவந்தனம் முதலிய நித்திய கருமங்களெல்லாம் கடவுளிடம் உண்மைப் பக்தி

உண்டாகிற வரையில்தான் அவசியம். அஃதாவது, பகவானுடைய திருநாமத்தைக் கேட்டபொழுதே கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் சொரிந்து மயிர்க் கூச்செறியும் வரையில்தான்.

9. கிராமங்களில் நடக்கும் தெருக்கூத்துக் களில், பக்கவாத்தியங்களின் ஒலியும், நடிப்பவர்கள் "ஹே கிருஷ்ண! இங்குவா; உன்னை ஒருமுறை பார்க்க விரும்புகிறோம்" என்று உரக்கப் பாடும் சத்தமும் இருக்கும்வரையில், கிருஷ்ண வேடம் பூண்டவன் தன்னை மற்றவர்கள் அழைப்பதைப் பொருட் படுத்துவதில்லை. அவன் உள்ளே சுருட்டுப் பிடித்துக் கொண்டும், பேசிக்கொண்டும் சாவதானமாக வேஷம் போட்டுக்கொண்டு மிருக்கிறான். சத்தமெல்லாம் ஓய்ந்து நாரத ரிஷி வந்து, இனிமையான குரலில், "என்னுயிர்க் குயிரான ஹே கோவிந்தா! நான் தரியேன்" என்று பாட ஆரம்பித்ததும், கிருஷ்ணன் நாடக மேடைக்கு வராமலிருக்க முடியாது; வெகு அவசரத்துடன் தோன்றுகிறான். இது

போலத்தான் கடவுளைக் காண விரும்புபவனுடைய தன்மையும். "பகவானே! வாரும்; தரிசனம் தாரும்" என்று உரக்கக் கூவும் வரையில் பகவான் நெடுந்தூரத்திலிருக்கிறார் என அறிக. பகவான் பிரத்தியக்ஷமாகத் தோன்றித் தரிசனம் தரும்போது அவன் (பக்தன்) மௌனமாகவும் சாந்தமாகவுமிருப்பான். பகவானை நாடும் பக்தன், பக்தி நிறைந்த மனத்துடன் அவரை அழைக்கும் போது, கடவுள் தன் பக்தன்முன் தோன்றாமல் இருக்கமாட்டார்.

10. ஸ்ரீராமசந்திரரைப் பார்த்து அஹல்யை கூறியதாவது:—ஓ! ஸ்ரீராமா! பன்றிக்குப் பிறந்தாலும் நான் ஒரு பொருளாகக் கருத மாட்டேன். ஆனால் எனக்கு உம்மிடம் இடைவிடாப் பக்தியும் மரியாதையும் மாத்திரம் இல்லாமற் போகும்படி செய்து விடாதே. இதைத் தவிர எனக்கு உம்மிடம் யாசிக்கத் தக்கது வேறொன்றுமில்லை."

---

# தியானம்

1. ஸாத்விககுணமுள்ள மனிதன் எவ்வாறு தியானஞ் செய்கிறான் என்பதை அறிவாயா? அவன் இரவிலே படுக்கையின் திரைக்குள்ளிருந்து தியானஞ் செய்கிறான். அவன் தூங்குகிறானென்று வீட்டிலுள்ளவர்கள் நினைக்கிறார்கள். தூய மனமுள்ள பக்தன், தன் அன்பை வெளிப்படையாகக் காட்டுவதில்லை.

2. தியானஞ் செய்து கொண்டு வரும்போது பக்தன் யோக நித்திரை யென்னும் உறக்கத்தில் ஆழ்ந்துவிடுகிறான். அம்மாதிரி வேளைகளில் பல பக்தர்கள் ஏதாவது பகவத் ஸ்வரூபத்தைக் காண்கிறார்கள்.

3. தியானஞ் செய்யும்போது, முழு மனத்தையும் கடவுளிடமே செலுத்தி ஆழ்ந்த தியானத்தி லமர்ந்திருக்கும்போது, பறவை யொன்று மேலே வந்து உட்கார்ந்தாலும் தெரியாது. ஜகன்மாதாவான காளிதேவியின் திருக்கோயிலிலுள்ள கல்யாண மண்டபத்தில் நான் தியானஞ் செய்யும்போது தூக்கணாங் குருவிகளும், வேறு சிறு பறவைகளும் என் மேலுட்கார்ந்து விளையாடுமென்று அக்காலத்தில் என்னைக் கண்டவர்கள் சொன்னார்கள்.

## ஸாதனையும் உணவும்

1. சுத்தமான நெய்யும் சோறுங் கலந்த ஸாத்விக உணவான அன்னத்தை மாத்திரம் ஒருவன் உண்டு, கடவுளை யடைய விரும்பாம லிருந்தானானல் அவனுக்கு அவ்வுணவு பசு மாமிசத்தைப் போலாகும். ஆனால் பசு மாமிசத்தை உண்ட போதிலும், கடவுளை யடைய முயல்பவனுக்கு இந்த மாமிசம் ஹவிஸன்னத்தைப் போன்றதாகும்.

2. தூய வாழ்க்கையைக் கைக்கொண்ட பிறகு உயிர் நீத்த விஜய கிருஷ்ண கோஸ்வாமியின் மாமியார், ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசித்து அவரை வணங்க வந்தனள். ஸ்ரீராம கிருஷ்ணர் அவ்வம்மணியைப் பார்த்து, " நீர் தகுந்த மார்க்கத்தையே பின்பற்றி யிருக்கிறீர்; உலகத்தில் வாழ்ந்து வந்த போதிலும், உமது மனம் பகவானிடமே இருக்கின்றது " என்றார். அதற்கு அவ்வம்மணி, ' அஃதெப்படி? நான் ஆத்ம ஞானத்தில் விருத்தியடைவதைக் காணவில்லை; பிறர்

உண்டபிறகு மிச்சமாகும் எச்சிலைத் தின்ன மனம் வரவில்லை'; (நான் என்னும் அகங் காரம் இன்னும் மறையவில்லை என்றபடி) என்றார். அதற்கு ஸ்ரீராமகிருஷ்ணர், 'நீர் என்ன சொல்கிறீர்; பிறருடைய எச்சிலைத் தின்பதா ஒருவர் அடைய வேண்டிய இலக்ஷி யம்? நாயும் நரியும் எச்சிலை விழுங்குகின்றன! அதனால் அவை பிரம்ம ஞானம் அடைகின் றனவா?' என்றார்.

---

## கடவுட் கிருபை

1. பல நூற்றுண்டுகளாக இருண்டு கிடக்கும் ஓர் அறையில் தீக்குச்சி ஏற்றப்படுமாகில் அத்தீக் குச்சியின் ஒளியானது இருட்டையெல்லாம் அகற்றி விடுகின்றது. அதுபோல, கடவுளின் திருவருட்பார்வை எண்ணிறந்த பிறவிகளிற் செய்த பாபங்களெல்லாவற்றையும் நீக்கிவிடும்.

2. தென்றற் காற்று வீசும்போது உள்ளே வைரம் உள்ள மரங்களெல்லாம் (வாசனையுள்ள) சந்தன மரமாக மாறும்; மூங்கில், வாழை முதலியவை அப்படியே இருக்கும். அதுபோல, பகவத்கிருபை பொழியும்போது, பக்தியும் நற்குணமுமுள்ளவர்கள் ஸாதுக்களாக மாறிவிடுகின்றனர்; பயனற்றவரும் உலக நினைவே உள்ளவரும் சீக்கிரம் மாறுவதில்லை.

3. தங்கள் தாய் அருகிலில்லாத வரையில் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருக்கின்றன. தங்கள் விளையாட்டுச் சாமான்களிலேயே அவைகள் மனம் ஊன்றி யிருப்பதால், பயம், விசாரம் என்பவை அவைகளுக்குத் தோன்ரு. ஆனல், தாய் உள்ளே வந்தவுடன், குழந்தை

கள் தங்கள் விளையாட்டுச் சாமான்களை வீசி யெறிந்து விட்டு, 'அம்மா! அம்மா' என்று கூவிக்கொண்டு தாயிடம் ஓடுகின்றன. நீயும், தற்காலம் உலக விளையாட்டுச் சாமான்களான செல்வம், பெருமை, கீர்த்தி முதலியவற்றி னோடு விளையாடிக்கொண்டிருக்கிறாய். அதிலே மகிழ்ச்சியடைந்து, அச்சம் கவலைகளின்றி யிருக்கிறாய். ஆனால் ஆநந்த ஸ்வரூபியான அன்னையின் திவ்விய தரிசனத்தைச் சிறிதே னும் காண்பாயானால், செல்வம், பெருமை, கீர்த்தி ஆகிய இவற்றினிடம் உனக்கு அவா வுண்டாகாது. இந்த விளையாட்டுச் சாமான் களை எறிந்துவிட்டு அவளிடம் ஓடிச்செல்வாய்.

4. அழுக்கினாலும் சேற்றினாலும் உடம்பை அசுத்தமாக்கிக் கொள்வது குழந்தையின் இயற்கை; ஆனால் பெற்றோர் அதனை அழுக் கடைய விடார். அதுபோல இம்மாயப் பிர பஞ்சத்தில் வசிப்பதினால் ஒருவன் எவ்வளவு மாசுள்ளவனா யிருந்தபோதிலும் அவன் பரி சுத்தனாவதற்குரிய வழிகளைக் கடவுள் ஏற் படுத்துகிறார்.

---

## சித்த புருஷரின் நிலைமை

1. இரும்பானது ஒருதரம் ஸ்பரிச வேதியினுல் தங்கமாக மாற்றப்பட்டு விட்டால், அது பூமியில் புதைத்து வைக்கப்படலாம்; குப்பை மேட்டில் போடப்படலாம்; ஆயினும், அது எப்போதும் தங்கமாகவே இருக்கும். கடவுளை யடைந்தவன் நிலைமையும் அதுபோலத்தான். மனத்தைக் கவரும் உலகப் பொருள்களின் நடுவில் வசித்தாலும், வனத்தில் ஏகாந்தத்தி லிருந்தாலும் ஒன்றும் அவனைக் கெடுக்கா.

2. ஸ்பரிச வேதியால் தொட்ட மாத்திரத்திலே ஓர் எஃகு வாளானது பொன் வாளாக மாறுதலாகின்றது; அது முன்னைய உருவத்தோடிருந்தாலும் பிறருக்குத் தீங்கு விளைக்கக்கூடிய வன்மையற்றதாகின்றது. அது போலவே, பகவானுடைய திருவடித் தாமரைகளைத் தொட்டவனுடைய வெளித்தோற்றம் மாருவிடினும், அவனுல் ஒருவருக்கும் தீங்கு விளைக்கமுடியாது.

3. ஒருவன் ஸ்ரீராமகிருஷ்ணரை "ஒரு சித்த புருஷன் அடையும் நிலை யாது!" என்று கேட்டான். அதற்கு அவர், "கத்தரிக்காய், உருளைக்கிழங்கு முதலியவை சித்தியானபோது மிருதுவாவது போல், மனிதன் சித்தியடைந்தபோது (மிருதுவான சுவாபமுள்ளவனுகின்ருன்) 'தான்' என்கிற அகங்கார நிலைமையை முற்றிலும் இழந்து வருகின்ருன்" என்ருர்.

4. ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது உடலையே சுட்டிக் காட்டி, "இஃது ஒரு வெறும் இருப்பிடமே. ஆனல், ஜகன்மாதாவின் வாசஸ்தானமாக அது இருக்கின்றது" என மொழிந்தருளுவர்.

5. இராமப்பிரஸாதரின் கீர்த்தனங்கள் எப்போதும் தம் ஸ்வாரஸ்யம் நீங்கப்பெறுவதில்லை. ஏன் தெரியுமா? அக்கீர்த்தனங்களை அவர் பாடியபோது ஜகன்மாதா அவருள்ளத்தில் குடியிருந்ததால்தான்.

6. இவ்வுலகில் சித்த நிலையானது பல வழிகளில் அடையப்பெறும்—ஸ்வப்ன ஸித்தர்,

மந்திர சித்தர், ஹடாத் சித்தர், நித்திய ஸித்தர் ஆக பலவகைப்படுவர் சித்தர்கள்.

7. இஷ்ட தேவதையின் மந்திரத்தைக் கனவில் பெற்று அதனை ஜபிப்பதனால் சித்தியடைபவர் ஸ்வப்ன ஸித்தர்கள் எனப்படுவார்கள். தக்க குருவினிடம் மந்திரோபதேசம் பெற்று, அவர் உத்தரவின்படி சாதனைகள் செய்பவர்கள் மந்திர ஸித்தர்களாவார்கள்—அவ்வழியே அவர்கள் ஸித்தியடைவார்கள். ஒரு மகானுடைய கிருபையினால் திடீரென்று ஸித்த நிலையடைபவர்கள் ஹடாத் ஸித்தர்களாவர். பிறந்தது முதலே ஸித்தி யடைந்திருப்பவர்கள் நித்திய ஸித்தர்களாவார்கள். இவர்கள் முதலிற் காய்த்துப் பிறகு மலரும் பூசணிச் செடியைப் போன்றவர்கள்.

8. ஒரு வாராவதியின்கீழ் நீரானது தாராளமாய் ஓடி விடுகின்றது. ஒருபோதும் தேங்கி நிற்பது கிடையாது. அதுபோல முக்தர்களின் வழியாகப் பணம் தாராளமாகச் செலவழிந்து போகின்றது. கொஞ்சமும்

த்ங்கி நிற்பது கிடையாது. இவ்வகுப்பைச் சேர்ந்த மனிதர்கள் உலக அறிவு சிறிதேனும் உடையவர்களாயிரார்.

9. 'தியானத்தில் ஸித்தி யடைந்தவனுக்கு முக்தி நெருங்கிவிட்டது' என்பது பண்டைக் காலப் பழமொழி. ஒருவன் எப்போது தியானத்தில் ஸித்தி யடைகிறுன் என்பது உனக்குத் தெரியுமா? தியானஞ் செய்ய உட்கார்ந்தவுடனேயே, அவன் ஆத்மஞானக் கடலில் ஆழ்ந்து தன்னை முற்றிலும் மறந்து விடும்போதுதான்.

10. 'ஜீவன் முக்தன் உலகத்தில் எவ்வாறு வாழ்கிறுன்?' மீன்குத்திப் பறவையைப் போல் அவன் உள்ளத்தில் வாழ்கிறுன். அப் பறவை நீருக்குள் முழுகுகிறது. ஆனல் அதன் இறகுகளைத் தண்ணீரானது நனைத்து விடுவதில்லை. அது தன் சிறகுகளை ஒருமுறை அடித்துக்கொண்டால் ஒருவேளை அதில் ஒட்டிக்கொண்டிருக்கக் கூடிய சில துளிகள் கூடச் சிதறி விடுகின்றன.

11. கப்பல் எந்தத் திக்கில் போய்க்கொண்டிருந்தாலும் காந்த ஊசி வடக்குத் திக்கையே காட்டுகின்றது; அதனால்தான் கப்பல் திசை மாறிப் போவதில்லை. ஒருவனுடைய மனம் கடவுளையே நோக்கி நிற்குமாயின், அவன் எவ்வித அபாயங்களிலிருந்தும் விடுபடுவான்.

12. சிக்கிமுக்கிக் கல்லானது பல யுகங்களாக நீருக்குள்ளிருந்தாலும், தன் குணத்தை இழந்துவிடாது. நீரினின்றும் வெளியே எடுத்து ஓர் உளியினால் அதைத் தட்டிப் பார். உடனே, பிரகாசமான நெருப்புப் பொறி ஒன்று உண்டாகும். அதுபோலவே உண்மைப் பக்தன், உலகத்தின் எல்லா அசுத்தங்களின் நடுவே வசித்தபோதிலும் நம்பிக்கையையும் கடவுளிடம் உள்ள அன்பையும் இழந்து விடுவதில்லை. கடவுளுடைய திருநாமத்தைக் கேட்டவுடனேயே பகவத் பக்தியினால் வெறிகொண்டவனாகின்றான்.

13. "மனம்போல மாங்கல்யம்" (என்பது ஆன்றோர் வாக்கு). கரப்பான் பூச்சியானது சதா 'பிரமரகீடம்' என்னும் ஒருவகைப்

பூச்சியையே மனத்திற் கொண்டிருப்பதனால், தானும் அவ்வாறாகவே மாறிவிடுகின்றதென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். அதுபோல, எவனொருவன் ஸச்சிதாநந்தத்தைப் பற்றிச் சதா நினைத்துக்கொண் டிருக்கிறானோ அவன், தானே ஆநந்தமயனாய் விடுகிறான்.

14. குடிமயக்கத்திலிருக்கும் ஒருவன், தன் ஒரே ஆடையைத் தலையிற் சுற்றிக்கொள்கிறான். சற்று நேரத்திற்கெல்லாம் அதைத் தன் அக்குளில் வைத்துக்கொண்டு, நிர்வாணமாகக் குழந்தையைப்போல நடக்கிறான். வெளிப்பார்வைக்கு ஒரு மகானுடைய செயல்களுக்கும் குடிகாரனுடைய செயல்களுக்கும் மாறுபாடு இராது.

15. தானென்னும் அகங்காரமானது தாமரை மலரின் இதழ், அல்லது தென்னை கமுகுகளின் மட்டைகளைப் போன்றது. தாமரை மலரின் இதழ்களாவது, தென்னை மட்டைகளாவது விழுந்துவிடுமானால் அவைகள் இருந்த இடத்திலே ஒரு வடு தோன்றும். அதுபோல, அகங்காரமானது ஒருவனைவிட்டு

நீங்கினபோதிலும், ஓர் அடையாளம் இருக்கும். ஆனால் அவ்வித அடையாளம் ஒருவருக்கும் தீங்கிழைக்காது; இந்தச் சடமாகிய உடலுக்கு வேண்டிய உண்டி, உறக்கம் இவற்றைத் தேடி வாழ்வதற்கு உதவி செய்கிறது. அவ்வளவுதான்.

16. மரத்திற் பழுத்த மாம்பழம் தானாகவே விழுவதைப்போன்று, பரிபூரண ஞானம் ஒருவனால் அடையப்படும்போது, எல்லாப் பந்தங்களும் தாமாகவே நீங்கிவிடுகின்றன. ஜாதி வித்தியாசங்களைப் பலவந்தமாக ஒருவன் நீக்கிவிடுவது தவறாகும்.

17. **ஸத்வம்** (தூய்மை), **ரஜஸ்** (காம்ய கர்மம் செய்யத் தூண்டும் குணம்), **தமஸ்** (அறிவின்மை) என முக்குணங்களுள்ளன. ஆனால் அவைகளுள் ஒன்றாவது கடவுளை அணுகாது. இதை விளக்கும் கதையொன்று கேள்:—ஒரு மனிதன் காட்டு வழியே போய்க்கொண்டிருந்தான். அப்போது, மூன்று திருடர்கள் அவனை எதிர்த்து, அவனிடமிருந்த

பொருள்களை யெல்லாம் பிடுங்கிக்கொண்ட னர். பிறகு, கள்வருள் ஒருவன், "இந்த மனிதனைச் சும்மா விடுவதால் பயனென்ன?" எனக்கூறி, அவனைக் கொன்றுதள்ளத் தன் கோடாரியை உயர்த்தினன். மற்றொரு கள்வன் முதற் கள்வனைத் தடுத்து "அடே! அவனைக் கொன்றுவிடாதே. அவனைக் கொல்வதால் என்ன பயன்? கைகளையும் கால்களையும் கட்டிப்போட்டு இங்கேயே விட்டு விட்டுப் போவதே மேல்" என்றான். இஃது ஒத்துக்கொள்ளப்பட்டது; உடனே மூவரும் அம் மனிதன்மேற் பாய்ந்து, அவன் கைகளை யும், கால்களையும் கட்டிப்போட்டு, அவ்விடம் விட்டு அகன்றனர். கொஞ்ச நேரத்திற்கெல் லாம், அத்திருடர்களிலொருவன் திரும்பி அவனிடம் வந்து "ஐயோ பாவம்! எவ் வளவு வேதனைக்கு நீ உட்பட்டிருப்பாய்? இந்த க்ஷணமே உன் கட்டுகளை அவிழ்த்து விடுகிறேன்" என்றான். அவிழ்த்த பிறகு அம்மனிதனைத் தன்னோடு கூட வரச்சொல்லி, காட்டிலிருந்து வெளியேற்றி விடுவதாகத்

தானே கூறி அழைத்துச் சென்றான். ராஜ பாதைக்கு வந்தவுடன், பாதை வழியே அம் மனிதன் சென்றால் தன் வீட்டையடையலாம் என்று திருடன் சொன்னான். நன்றியறித லுள்ள மனிதன் அத்திருடனைப் பார்த்து, "ஐயா! என் உயிரைக் காப்பாற்றினீர். தயவுசெய்து என் வீட்டிற்கு வாரும்" என் றான். அதற்குக் கள்வன் கூறியதாவது:— "இல்லை, அங்கு நான் வரமுடியாது—ஜனங் களுக்குத் தெரிந்துவிடும்; உன் வீட்டிற்குப் போகும் வழியைத்தான் நான் காட்டலாம். அது முடிந்ததால் நான் இப்பொழுது திரும் பிப் போகவேண்டும்."

18. முக்தர்கள் உலகத்தில் எவ்வாறு வாழ் கிறார்கள்? அகங்காரம் அல்லது தங்களிச்சை யென்பதில்லாமையினாலே, பலத்த காற்றினால் இங்குமங்கும் அடித்துக்கொண்டு போகப் படும் உலர்ந்த சருகுகளுக்கு அவர்களை ஒப் பிடலாம். இந்தச் சருகுகள் சில வேளை களில் குப்பை மேட்டுக்கும் சில வேளைகளிற் சுத்தமான இடங்களுக்கும் அடித்துக்

கொண்டு போகப்படுகின்றன. முக்த புருஷர்களின் விஷயம் இதைப் போன்றதே.

19. ஸ்ரீராமகிருஷ்ணர் இவ்விதம் அடிக்கடி கூறுவதுண்டு:—“(1) குரு, (2) கர்த்தா, (3) தகப்பனர்—இம்மூன்று மொழிகளும் என்னிருதயத்தை வாட்டி வருத்துகின்றன. நான் கர்த்தாவன்று; கடவுளே கர்த்தாவாவர்; அவர் திருக்கரங்களாற் செலுத்தப்படும் கருவியாவேன் அடியேன்.”

20. வேகவைக்காத நெல்தான் முளைக்கும்; வேகவைத்த தானியம் முளையாது. அது போலவே சித்தனுகிய ஒருவன் (**சித்தமானது** என்ருல் அவிக்கப்பட்டது என்றும் சித்தர் நிலையை யடைந்தது என்றும் இரண்டு பொருள்படும்) இவ்வுலகில் மீண்டும் பிறவி யெய்தான்.

21. எந்த நிலையை யடைந்த பின்னர் ஒருவர் பரமஹம்ஸர் (ஆத்மஞானப் பரிபக்குவமடைந்தவர்—ஹம்ஸம் என்பது அன்னப் பறவை, ஆத்மா என இருபொருள்படும்) என அழைக்கப்படுவரோ அந்த நிலைமை

யாது? நீருடன் கலந்திருக்கும் பாலில் நீரை நீக்கிப் பாலைப் பருகும் அன்னப் பறவையைப் போன்று, பரமஹம்ஸர், **அஸத்தை** அதாவது தோற்றமாகிய உலகத்தை நிராகரித்து **ஸத்** தாகிய பரப்பிரம்மத்தை மாத்திரம் அங்கீகரிக் கிறார்.

22. முதலில் அறிவின்மை, பின்பு அறிவு. ஆனால் இவ்விரண்டும் வியாவகாரிக நிலை யிலேயே உள்ளன. பிரம்மத்தை ஒருவன் அறியும்போது, அவன் அறிவு, அறிவின்மை ஆகிய இரண்டு படிகளையும் தாண்டிச் செல் பவனாகிறான்.

இதற்கு நேரான ஓர் உதாரணம் பார். உனது உள்ளங்காலில் முள் ஒன்று தைத்தால் அதனை வெளியே யெடுக்க இன்னொரு முள் வேண்டியிருக்கிறது. முதல் முள்ளை வெளியி லெடுத்ததும், இரண்டையும் நீ எறிந்துவிடு கிறாய்.

23. ஒருவர் ஸித்தியடைந்த (அதாவது எம்பெருமானைத் தரிசித்த) பிறகு அவர் தப் பான காரியம் எதையும் செய்ய வன்மையற்ற

வராகின்றூர். நடனத்தில் சித்திபெற்ற ஒரு வர், ஒருக்காலும் அடி தவறுவதில்லை.

24. தேவகுருவான **பிருஹஸ்பதி**யின் குமாரன் **கசன்** ஸமாதி நிலையிலிருந்து இவ்வுலக நினைவிற்கு வந்தபோது, "உலகம் உமக்கு இப்பொழுது எப்படித் தோன்றுகிறது?" என்று ரிஷிகள் கேட்டனர். அதற்குக் **கசன்** "கடவுள் எல்லாவற்றுள்ளும் வியாபித்திருப்பதாக நான் அறிகிறேன்; அவரைத் தவிர வேறொன்றையும் நான் காணவில்லை" என்றான்.

---

## தர்ம ஸமன்வயம் அல்லது மதங்களின் ஒற்றுமை

1. ஒரு பட்டணத்தைப் பிரகாசிப்பிக்கும் தீபங்கள் சிலவிடங்களில் குறைந்த ஒளியுடனும் இருக்கின்றன. ஆனல் அவைகளுக்கு வேண்டிய ஒளி தரும் வாயு ரூபமான பொருளோ * ஓரிடத்திலிருந்து தான் வருகின்றது; அதுபோல, பல தேசங்களிலும், பல சாதியரிடமும் தோன்றும் சமயாசாரியர்கள், மூலகாரணரான எம்பெருமான் ஒருவரிடமிருந்தே தங்கள் ஆத்மஞான அருட்பிரகாசத்தைப் பெறுகின்றனர்.

2. ஒரு வீட்டின் மேற்கூரைக்கு, ஏணியின் மூலமாகவோ, ஒரு மூங்கிலின் உதவியைக் கொண்டோ, மாடிப்படி வழியாகவோ, வேறு

---

* கல்கத்தா முதலிய நகரங்களில் 'காஸ்' என்னும் ஒளி தரும் வாயுவை ஓரிடத்தில் உண்டாக்கிக் குழாய்களின் வழியே தெருக்கள் தோறும் செல்லச் செய்து விளக்குகளை ஏற்றுவதற்கு உபயோகிப்பது வழக்கம். இதைப் பகவான் குறிப்பிடுகிருர்.

வழிகளாலோ போதல் கூடும். அதுபோலவே கடவுளை யடைவதற்குள்ள வழிகளும் பல. உலகத்திலுள்ள ஒவ்வொரு மதமும் **அவரை** அடைவதற்கான மார்க்கமேயாகும்.

3. கடவுள் ஒருவரே; ஆனால் அவர் திரு நாமங்கள் அனந்தம்; அவரை வழிபடற்கேற்ற பாவனா மார்க்கங்களும் அனந்தம். எப்பெய ரிட்டாயினும் அழை; உனக்குப் பிரியமான எவ்வித பாவனையைக் கொண்டும் வணங்கு— நீ அவரைத் தரிசிப்பது நிச்சயம்.

4. **ஸச்சிதானந்தப் பொருளாகிய ஈசுவரர் ஒருவரே** என்ற நம்பிக்கையுடன் ஸாதனை புரிவோன் எவனாயினும், அவன் ஈசுவரனை எந்த பாவானையைக் கொண்டு, எந்த நாமத்தால் எவ்வழியில் வணங்கின போதிலும் தான் நாடும் பரம்பொருளை அடைவானென்பது திண்ணம்.

5. பல சமயங்களும், பரம்பொருளை யடைவதற்கான பல்வேறு வழிகளாம். (தாம் வீற்றிருக்கும் காளி கோயிலைச் சுட்டிக் காட்டி) இந்தக் காளி கோயிலுக்கு வருவதற்குப் பல

மார்க்கங்களுள. சிலர் படகுகளிலும், சிலர் வண்டிகளிலும், மற்றுஞ் சிலர் கால் நடையாகவும் வருகின்றார்கள். அதுபோலவே, வெவ்வேறான ஜனங்கள் வெவ்வேறு மதங்களைப் பின்பற்றிக் கடவுளை அடைகிறார்கள்.

6. ஒரு தாய் தன் குழந்தைகளிடத்தில் ஒரேமாதிரியான அன்புகொண்டிருந்த போதிலும் யார் யாருக்கு எந்த எந்த உணவு ஒத்துக்கொள்ளுமோ அவற்றை முறையே தருகிறாள். அதுபோல, பல திறப்பட்ட மக்களுக்கும் அவரவர் சக்தி, ஆத்ம பரிபக்குவநிலை இவைகட்குத் தகுந்தபடி வெவ்வேறுவிதமான பூஜா மார்க்கங்களைக் கடவுள் ஏற்படுத்தியிருக்கின்றார்.

7. சிறந்த பக்திமானாக விளங்கின காலஞ்சென்ற கேசவ சந்திரஸேனர் ஸ்ரீராமகிருஷ்ணரை நோக்கி, 'கடவுள் ஒருவராகவே இருக்க மதங்கள் பலவற்றுள்ளும் பகைமை இருப்பதேன்?' என்று வினவினார். அதற்கு ஸ்ரீராமகிருஷ்ணர் "ஒவ்வொரு மனிதனும், 'இது என் நிலம்' 'இது என் வீடு' என்று

கூறி, தனக்கு உரிமையாகத் தோன்றுவதை பாகஞ் செய்து வேலியிட்டுக்கொள்கிறான். ஆனால், அளவிட முடியாத ஆகாயத்தை ஒருவராலும் பங்கிட முடியாது. அதுபோல, சாதாரண மனிதன் அறியாமையினால், தன்னுடைய மதமே சிறந்ததென்று கருதி, வீணாகக் கலவரம் மிகுதியும் செய்கிறான்; ஆனால் அவன் மனத்தில் ஞானம் உதயமாகும்போது, சமயச் சச்சரவுகளெல்லாம் மறைந்து விடுகின்றன" என அருளினார்.

8. வினா:—ஹிந்துக்களுள் பல சமயப் பிரிவுகளும், கொள்கைகளு மிருக்கின்றனவே, அவற்றுள் எந்தப் பிரிவை அல்லது கொள்கையை ஒருவன் கைக்கொள்ளவேண்டும்?

விடை:—ஒரு முறை **பார்வதி தேவியார் சிவபெருமானை** நோக்கி, "நாதா! ஸச்சிதானந்த நிலையை யடைவதற்கு வழி யாது?" என வினவினார். அதற்குப் பெருமான் "நம்பிக்கையே வழியாகும்; வெவ்வேறு சமயங்கள், கொள்கைகள் முதலியவற்றின் வேற்றுமைகள் கவனிக்கத் தக்கனவல்ல" எனத் திரு

வாய் மலர்ந்தருளினர். ஒவ்வொருவரும் தம் சமயத்திற் கூறப்பட்டுள்ள ஸாதனமுறை களைக் கைக்கொள்ளட்டும்.

9. குறுகின நோக்கமுடையவர்கள் தங்கள் சமயமல்லாத பிற சமயங்களைத் தூஷித்துத் தம்முடையதே சிறந்ததெனக் கூறி, 'டால்' * (சமயப் பிரிவுகளை) ஏற்படுத்துகின்றார்கள். கடவுளிடம் பக்திபெருகி நிற்கும் மன முடையவர்கள், சமயப் பொறாமை, சச்சரவு களைத் தாண்டி நிற்கின்றார்கள். தங்கள் நேரத்தை பக்தி செய்வதிலேயே செலவழிக் கிறார்கள். டால் *நீரோட்டமுள்ள ஆற்றில் வளருவதில்லை; ஆனால் குளங்களிலும், நீர் தேங்கி நிற்கும் சிறு குட்டைகளிலுமே அது வளரும்.

10. ஒரு பெரிய மீனைத் துண்டித்து, வீட்டி லுள்ளவர்கள் பலருக்கும், அவரவர் ருசிக்கு

---

* இச்சொல் கோரை என்றும் சமயப் பிரிவு என் றும் வங்காளி பாஷையில் இருவிதப் பொருள் தரும்.

இயைந்தவாறு, கறி, குழம்பு, வறுவல் முதலியவை செய்வதுபோல, கடவுள் ஒருவராக இருந்தபோதிலும், அவர், பக்தர்களால், அவரவர்களின் சொந்த விருப்பப்படி, வெவ்வேறு வழிகளில் வணங்கப் படுகிறார்.

11. **இருப்பது** ஒன்றே; ஆனால், பெயர்கள் மாத்திரம் பல. உதாரணமாக, ஒரே பொருளாகிய தண்ணீரானது வெவ்வேறு தேசங்களில் வெவ்வேறு காலங்களில் வசிக்கும் வெவ்வேறு ஜனங்களால், வெவ்வேறு பெயர்கள் இட்டு வழங்கப்படுகின்றது. இது வங்காளி பாஷையில் **ஜல்** எனவும், ஹிந்தியில் **பாணி** எனவும், ஆங்கிலத்தில் **வாட்டர்** அல்லது **ஆக்வா** எனவும் வழங்கும். ஒருவருடைய பாஷை மற்றொருவருக்கு விளங்காததனால் தான் ஒருவர் சொல்வது மற்றொருவருக்கு விளங்குவதில்லை. இந்தக் கஷ்டம் இல்லாவிட்டால் தப்பபிப்பிராயங்கள் இரா.

12. எவ்வழியில் அவரைப்பற்றித் தியானஞ் செய்தாலும், அவர் திருநாமங்களை உச்சரித்தாலும், நீ ஆத்ம ஞானபிவிருத்தியடை

வாய். கற்கண்டினால் செய்யப்பட்ட தின்பண்டமாவது, நேராகப் பிடித்துத் தின்றாலும் சாய்த்துப் பிடித்துத் தின்றாலும் ஒரே மாதிரியான சுவையுள்ளதாகவே யிருக்கும்.

---

## கர்மத்தின் பலன்கள்

1. பாபமானது, பாதரஸத்தைப்போலவே, ஒருகாலும் மறைக்கத் தக்கதன்று; பாதரஸம் கலந்த மருந்தை மிகுந்த இரகசியமாக ஒருவன் உபயோகித்தாலுங்கூட ஒருநாள் இல்லாவிடினும் மற்றொரு நாள் மேலே புண்கள் தோன்றுவது நிச்சயம். அதுபோல, ஒருவன் பாபஞ் செய்தால், அதன் பலனை ஒரு சமயமில்லாவிட்டாலும் மற்றொரு சமயம் நிச்சயமாய் அநுபவிக்க வேண்டியவனுவான்.

2. வண்ணுத்திப் புழு தன்னுடைய உமிழ் நீரிலேயே தன்னை மூடிக்கொள்கின்றது. அதுபோல உலகத்தில் ஆழ்ந்திருக்கும் ஆத்மாவானது தானியற்றிய கருமங்களாலான பந்தங்களிலேயே அகப்பட்டுக் கொள்கின்றது. ஆனால், அந்தப் புழுவானது வண்ணுத்திப் பூச்சியாக மாறும்போது, தன் கூண்டைக் கிழித்துக்கொண்டு வெளிவந்து சுயேச்சையாகத் திரிகின்றது; அதுபோல உலகத்தில் அழுந்தியிருந்த ஆத்மாவானது, விவேகம், வைராக்கியம் என்னும் இறகுகளை யுண்டு பண்ணிக்கொண்டு முக்தி யடைகிறது. (பந்தங்களிலிருந்து விடுபடுகின்றது.)

## இக்காலத்திற்குத் தகுந்த மதம்

1. ஸ்ரீராமகிருஷ்ணர் பின்வருமாறு அடிக்கடிக் கூறுவர் :—காலையிலும் மாலையிலும் கைத்தாளம் கொட்டிக்கொண்டே ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்; அப்போது உன் பாபங்களும் துன்பங்களும் உன்னைவிட்டு நீங்கும். ஒரு மரத்தின்கீழ் நின்று கொண்டு கையைக் கொட்டுவாயானல், அதன் மேலிருக்கும் பறவைகளெல்லாம் பறந்தோடிப்போம்; அது போல கை கொட்டிக்கொண்டே ஹரி நாம ஸங்கீர்த்தனம் செய்வாயாகில், உன் உடலென்னும் மரத்திலிருந்து தீய எண்ணங்களாகிய பறவைகள் பறந்துபோம்.

2. பூர்வ யுகங்களிலே ஜனங்கள் சாதாரண ஜுரத்தால் பீடிக்கப்படுவது வழக்கம். அப்பொழுது சில மூலிகைகளைக்கொண்டு செய்யப்பட்ட கஷாயத்தைக் குடித்தால் ஜுரம் விட்டுப்போம். இக்காலத்திலோ, மலேரியா முதலிய பல ஜுரங்கள் தோன்றியிருக்கின்றன; அதனுற் பீடிக்கப்படும் நோயாளிகளைக்

குணமாக்குவதற்கு **டாக்டர் குப்தாவின் ஜ்வர மருந்து** முதலிய கடுமையான மருந்துகள் தேவையாயிருக்கின்றன. முற்காலங்களிலே ஜனங்கள் பக்திக்குரிய ஸாதனைகள் புரிவதிலும் வேதங்களிற் கூறப்பட்டுள்ள அனுஷ்டானங்களைக் கையாளுவதிலுமே ஊக்கமாயிருந்துவந்தார்கள். இந்தக் கலியுகத்திலோ வெனில் வாழ்வெல்லாம் சாப்பாட்டிலேயே தங்கியிருக்கின்றது; மனமோ பலவீனமாயிருக்கின்றது. உலக பந்தங்களிலிருந்து தறித்துக்கொள்வதற்கு இந்த யுகத்திற்கான ஒரே வழி யெதுவெனில், மனத்தைக் கடவுளிடம் நிறுத்தி அவரது திருநாமங்களைச் சதா பஜித்துக் கொண்டிருப்பதேயாம்.

3. அமிர்தம் நிறைந்த பாத்திரத்திற்குள் ஒருவன் எந்த விதமாக விழுவானாயினும் அவன் இறவாத் தன்மையை யடைகிறான். பல தவங்களைச் செய்து அதன் பயனாய் அதனுள் விழுந்தால் ஒருவன் இறவாத்தன்மை யெய்துகிறான்; அதுபோல பிறரால் உள்ளே தள்ளப் படும் ஒருவனும் இறவாத் தன்மையை யடை

கிறான். அறிந்தோ, அறியாமலோ அல்லது தவறியேதானோ பகவந் நாமத்தை உச்சரிப்பாயானால், அதன் பலனை நீ அடைவாய்.

4. இந்தக் கலியுகத்திற்கு நாரத மஹரிஷியால் அனுஷ்டிக்கப்பட்ட பிரேமை, பக்தி, சரணாகதி ஆகிய இவற்றைக் கைக்கொள்வதே மிகத் தகுதியாம். மற்ற யுகங்களுக்கோ, பல கடுந்தவங்களையும் பக்தி ஸாதனைகளையும் செய்தல் வேண்டுமெனக் குறிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், இந்த யுகத்தில் அவைகளை வெற்றியுடன் செய்து முடிப்பது மிகக் கடினம். உடல் வன்மையைக் குறைக்கும் மலேரியா ஜுரம் ஒருபுற மிருக்கட்டும்; மனிதராயுள் கூட இப்பொழுது மிகக் குறைந்து விட்டது. ஆகவே, பக்திக்குரிய கஷ்ட ஸாதனைகளை ஒருவன் எப்படி அனுஷ்டிக்க இயலும்.

---

# மதப்பிரசாரம் அல்லது சமயபோதனை

1. பக்தியுள்ள ஒரு ஞானியை அவருடைய உறவினர் மதிப்பதில்லை; ஆனால், பிறர் அவரிடம் மிகவும் வணக்கமாக இருக்கிறார்கள்; ஏன் அப்படி? கழைக் கூத்தாடியின் உறவினர் அவருடைய ஜால வித்தைகளைக் காணக் 'கும்பல்' கூடுவதில்லை; ஆனால், தூரத்திலிருப்பவர்கள், அவனுடைய அதிசயமான வேடிக்கைகளைக் கண்டு வாய் பிளந்து நிற்கிறார்கள்.

2. இலவம் பஞ்சின் விதைகள் அதன் மரத்தினடியில் விழுவதில்லை. அவ்விதைகள் காற்றினால் வெகு தூரம் எடுத்துச் செல்லப்பட்டு அங்கே வேரூன்றுகின்றன. அதுபோல, சிறந்த ஓர் ஆசாரியருடைய ஆத்ம சக்தி, தூரத்திலுள்ள இடங்களில் தோன்றி அங்குள்ளவர்களால் நன்கு மதிக்கப்படுகின்றது.

3. ஒரு விளக்கின் ஒளி, தூரத்திலுள்ள பொருள்களைத் தெளிவாகக் காண்பித்தாலும்

விளக்கின் கீழே எப்போதும் நிழலிருக்கும்; அதுபோல மகானொருவரின் அருகிலுள்ளவர்கள் அவரை (அவருடைய மகிமையை) அறிவதில்லை. தூரத்திலுள்ளவர்கள் அவருடைய ஆத்ம சக்தியைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறார்கள்.

4. பிறனொருவனைக் கொல்லக் கத்திகளும் கேடயங்களும் தேவை; ஆனால், ஒருவன் தானே இறக்க விரும்பினால், குண்டூசி யொன்றே போதும்; அதுபோலவே, பிறருக்குபதேசம் பண்ண ஒருவர் வேதங்களையறியவேண்டும்; பல வாதங்கள் புரியவேண்டும். ஆனால், ஸ்வானுபூதியடையவோ, ஒரு மூலமந்திரத்தில் திட நம்பிக்கை யிருந்தால் போதும்.

5. நான் பிறந்த ஊரின் பக்கத்தில் ஜனங்கள் தானியத்தைக் குவியலாய்ச் சேர்த்து அளப்பார்கள். ஒருவன் ஒரு பக்கத்தில் உட்கார்ந்து அளந்துகொண்டே இருப்பான். கைக்கெட்டிய தானியம் அளந்து போடப்

பட்டதும், மற்றொருவன் அவன் கைக்கு எட்டும்படியாகத் தானியத்தைத் தள்ளிக் கொடுப்பான். இதைப் போலவே, நிஜபக்தனுக்கு வேதாந்த உண்மைகள் தோன்றுவதில் எப்போதும் குறைவேற்படுவதே யில்லை; அவனுள்ளத்தில் புதிய கருத்துக்கள் தோன்றிக்கொண்டே யிருக்கின்றன. அவை எப்போதும் வற்றுவதில்லை.

6. விறகு முதலியவைகளைச் சேர்த்து ஒருவன் நெருப்பு மூட்டினால் பலர் வந்து குளிர் காய்வதுபோல, பல அரிய கடுந்தவங்கள் புரிந்து கடவுளையறிந்த மகான்களைக் கூடியும் அவர்களின் உபதேசங்களைக் கேட்டு நடந்தும் அநேகர் கடவுளின்மீது தங்கள் மனத்தைச் செலுத்தி நிறுத்துகின்றனர்.

7. உண்மை யுபதேசம் எப்படிப்பட்டது? பிறருக்குபதேசம் செய்வதை விட, ஒருவன் கடவுளைத் தொழுவானானால் அதுவே போதுமான உபதேசமாகும். தன்னை முக்தனாக்கிக் கொள்ள முயலுபவனே உண்மை உபதேசி.

நூற்றுக்கணக்கான ஜனங்கள் எங்கிருந்தோ, முக்தனிடம் வந்து உபதேசம் பெறுகிறார்கள். பூ மலரும்போது அழைப்பாரின்றியே, தேனீக்கள் அதனிடம் வந்து சேருகின்றன.

---

## நான்கு வகை

1. கல்கத்தாவில் ஒரு பெரிய பணக்காரன் ஒரு சமயம் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்து குதர்க்கமாக வாதஞ்செய்தான் ஸ்ரீராமகிருஷ்ணர் அவனிடம், "பயனில்லாத வாதங்களினால் விளையும் நன்மை யென்ன? சுத்தமான நம்பிக்கையுள்ள மனத்துடன் பகவந் நாமத்தை ஜெபி. அது உனக்கு நன்மை தரும்" என்றார். இந்த நற்போதனையைக் கர்வம் மிகுந்த அம் மனிதன் கவனியாது, மரியாதையின்றி 'நீங்கள் எல்லாம் அறிந்துவிட்டீர்களோ?' என்று கேட்டான். ஸ்ரீராமகிருஷ்ணர் கூப்பிய கைகளுடன் பணிவாய் "உண்மை தான்; என்றால் ஒன்றும் அறிந்து கொள்ள முடியவில்லைதான். ஆனாலும், துடைப்பமானது, தான் அசுத்தமாயிருந்தாலும் தன்னால் துடைக்கப்பட்ட இடத்தைச் சுத்தமாக்குமே" என்றார்.

2. ஸ்ரீராமசந்திரர் காட்டின் வழியே சென்றபோது, தம் வில்லையும் அம்பையும்

தரையில் நட்டுவிட்டு, **பம்பை** என்னும் குளத்தில் நீர் **அருந்தச்** சென்றார். கரையேறின போது, ஒரு தவளை வில்லால் துளைக்கப் பட்டமையால் உடம்பு முழுவதும் இரத்தந் தோய்ந்து கிடப்பதைக் கண்டார். அவர் விசனமடைந்து, காயமுண்ட தவளையைப் பார்த்து, "நீயேன் சத்தஞ் செய்யவில்லை? அப்போது நீ இங்கிருப்பது எனக்குத் தெரிந்திருக்கும்; உனக்கு இந்த ஆபத்தும் நேர்ந்திராதே!" என்றார். அதற்குத் தவளை "ராமா! எனக்கு ஆபத்து நேரும்போது, 'ஹே ராமா! என்னைக் காப்பாற்று' என்று கூறி உம்மைச் சரணடைகிறேன். இப்போது நீரே என்னைக் கொல்லும்போது, நான் யாரிடம் முறையிடுவேன்?" என்று பதில் சொல்லிற்று.

3. பதிவிரதையும் பக்தையுமான ஒரு பெண்மணி தன் புருஷனுக்கும் குழந்தைகளுக்கும், அன்பு நிறைந்த மனத்துடன் பணிவிடை புரிந்துகொண்டே மனத்தைப் பகவான்மீது நிலையாக வைத்திருந்தாள்.

தன் புருஷன் இறந்து தகனஞ் செய்யப்பட்ட வுடனே, அவள் தன் கண்ணாடி வளையல்களை உடைத்தெறிந்து விட்டு, பதிலாக இரு தங்க வளையல்களை அணிந்து கொண்டாள். வழக்கத்திற்கு மாறான அச் செய்கையைக் கண்ட ஜனங்கள் ஆச்சரியப்பட்டார்கள். அவர்களிடம் அவள் சொன்னதாவது:—இதுவரையில் என் பதியினுடைய சரீரமானது கண்ணாடி வளையல்களைப்போல அநித்தியமாயிருந்தது. இப்போது அந்த அநித்ய சரீரம் அழிந்து போயிற்று. அவர் நித்தியமானவராயும் எல்லா வகைகளிலும் பரிபூர்ணமானவராகவும் இருக்கின்றார். அவர் உடல் இனி அழியாது. ஆகவேதான் நான் சுலபமாக உடையுந்தன்மையுள்ள கண்ணாடி வளையல்களைத் தள்ளிவிட்டு, கெட்டியான நகைகளை அணிந்து கொண்டேன்.”

4. கங்கையிலுள்ள நீரை வெறும் சாதாரண நீராகக் கருதக்கூடாது; ஸ்ரீபிருந்தாவனத்துத் துளசியை வெறும் மண்ணாகக் கருதலாகாது; (பூரி க்ஷேத்திரத்தில் பகவான் ஸ்ரீ ஜகந்நாத

ருக்கு நிவேதிக்கப்படும் நைவேத்தியமான) **மகாப்** பிரஸாதத்தை வெறும் அன்னமாக எண்ணக்கூடாது. இம்மூன்றும் பகவானின் ஸ்தூலரூபத் தோற்றங்களாம்.

குருதேவர் வாக்கியம் முற்றும்



## "ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்"

ஆத்மஞானம் போதிக்கும் சமயத் தமிழ்ப் பத்திரிகை :—ஸமரஸ நோக்கம் கொண்டது. பண்டிதரும் பாமரரும் படித்து இன்புறுவது.

வருடசந்தா ரூ. 3 உள்நாடு. இலங்கை
ரூ. 4-8-0 வெளிநாடு.

சந்தா தையும் ஆடியும் தொடங்கும்.

**வெள்ளி மலர்** (ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்) 90 பக்கம் விலை ரூ. 1-8-0 பல இனிய கட்டுரைகளை யுடையது.

மானேசர் :

*ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்*

**மயிலாப்பூர் :: சென்னை**

## சுவாமி விவேகாநந்தர் இயற்றிய

**1. நமது தாய் நாடு** விலை ரூ. 1.

தேச முன்னேற்றத்தை விரும்புவோர்க்கு ஓர் அரிய நூல்.

**2. தற்கால இந்தியா** விலை 10 அணா.

இந்தியாவின் வரலாற்றையும், அதன் சிறப்பியல்பையும், அதன் மேன்மையையும் பெருமையையும் சுவாமிகள் எடுத்துக் காட்டுகிறார்.

மானேசர் :

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**

மயிலாப்பூர் :: சென்னை

## சுவாமி விவேகாநந்தர் இயற்றிய

1. கருமயோகம் ரூ. 1- 0-0

2. பக்தி யோகம் ரூ. 0-12-0

அனைவரும் விரும்பும்

**பக்தி மார்க்கம்** விலை ரூ. 0-8-0

(சுவாமி பரமாநந்தர் இயற்றியது).

மானேசர் :

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**

**மயிலாப்பூர் :: சென்னை**

## சுவாமி விவேகானந்தர் இயற்றியவை

**1. வீரமுரசு .... .... 0-6-0**

சுவாமிகளின் உபதேச ஸாரம் இதில் உள்ளது :—வீரத்தை ஊட்டும் தீர மொழிகளின் திரட்டு - ஸமரஸம், அன்பு, தியாகம், தொண்டு, பலம் இவைகளைப் பற்றிய உபதேசங்கள்.

**2. நம்மவர் நாட்டு ஞானவாழ்க்கை .... 0-4-0**

விவேகானந்தரின் பிரசங்கங்களினின்றும் தொகுக்கப்பட்டுள்ளது.

மானேசர் :

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**

மயிலாப்பூர் :: சென்னை

முத்தமிழ்ப் புலவரான சுவாமி
விபுலாநந்தர் இயற்றிய

**நடராஜ வடிவம் .... .... 0-5-0**

*நடராஜ வடிவத்தின் உட்பொருளைப் பிரமாணங்களோடு எடுத்துரைக்கும் நூல்.*

---

சுவாமி விவேகாநந்தர் இயற்றிய

**எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் .... 0-5-0**

*ஈசாவாஸ்ய உபநிடத ஸாரம் அடங்கியது.*

மானேசர் :

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**
**மயிலாப்பூர் :: சென்னை**

